"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1893 ஜனவரிமீ. இலக்கம். 9.

## சுதந்தரங்களின் விளக்கம்.

க-ம் அத்தியாயம்—II.

(230-வது பக்கத்தொடர்ச்சி.)

15. எல்லாமனிதருக்கும் சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் பொதுவிற் சமம். யோக்கியதையிலும் சக்தியிலும் விளங்கும் விசேஷங்களினுற் சித்திக்கும் வெவ்வேறுன சுதந்தரங்களிலுள்ள உயர்வுதாழ்வுகளைத்தவிர, வேறு சுதந்திரங்களில் சிலருக்குயர்வும் சிலருக்குத் தாழ்வுமில்லை. அப்படியே சிலருக்குச் சுதந்தரங்கள் மிகுதியாயும் சிலருக்கு அவை குறைந்துமிருப்பதில்லை. எவருக்கும் சாமானிய சுதந்தரங்கள் சமம். ஏனெனில், எல்லாமனிதரிலும் மானிடவியல்பு பொதுவாய் விளங்குகிறதென்றும், அவ்வியல்பே மனிதருக்குள் வழங்கிவரும் சுதந்தரங்களுக்கும் நிர்ப்பந்தங்களுக்கும் மூலகாரணமா யிருக்கிறதென்றும் பலமுறை மேற்கூறப்பட்டிருக்கின்றது. உதாரணமாக, செல்வம் பிறப்பு முதலியவைகளில் எவ்வளவு தாரதம்மிய மிருந்தாலும், சொத்தைச் சம்பாதித்தற்கும், விலக்கப்பட்ட சிலவற்றைத்தவிர வேறுஉடன்படிக்கைகளைத் தம் மனம்போற் செய்துகொள்வதற்கும் ஒவ்வொருவருக்குஞ் சுதந்தரமுண்டு; அதைத்தடுக்காதிருக்கவும் ஒவ்வொருவரும் நிர்ப்பந்தப்பட்டிருக்கிறுர்கள்.

எல்லாமனிதருக்கும் சுதந்தரங்கள் சமமென்பது இரண்டு விலக்கிற் குட்பட்டிருக்கிறது. பகுத்தறிந்து நடந்துகொள்ளத்தக்க முதிர்ந்த பருவம்அடையாததினுல் பிறரைப்போலத் தங்கள்சுதந்தரத்தைச் செலுத்திக்கொள்ளச்சக்தியில்லாத சிறுவர்களுக்குச் சொத்திற்குடைமையிருந்தாலும் அச்சொத்தைத் தன் விசாரணைக் குட்படுத்தி நடத்துஞ் சுதந்தரமில்லை. தங்கள் செய்கைகளினுல் விளையும்பலன் இத்தன்மையதென்று முன் பகுத்தறியும்திறமை அவர்க்கில்லாததினுல் முதிர்ந்தபருவம் வந்தபிறகே சொத்திற்குள்ள சுதந்தரங்கள் அவருக்குக் கொடுக்கப்படும். அப்படியே பைத்தியம்பிடித்தவர்களுக்கும் புத்தி ஸ்திர மில்லாதவர்களுக்கும் சுதந்திரங்களும் அவைக்குத் தக்க நிர்ப்பந்தங்களுங் கிடையா.

மனிதருக்குச் சாமானிய சுதந்திரநிர்ப்பந்தங்கள் சமமாயிருக்கின்றனவென்று மேற்பிரஸ்தாபித்திருக்குஞ் சித்தாந்தத்தைக் கைக்கொண்டு சொத்து, ஒவ்வொருவர்செய்யும்வேலை, அவ்வேலைக்குள்ளகூலி, குடும்பத்திலும் ராச்சியத்திலுமுள்ள நிலைமை, இவைமுதலிய எல்லாவற்றிலும் சங்கத்திற் சேர்ந்தவருக்கெல்லாம் சமதைநிலை பெறும்படி சட்டத்தினுற் கட்டாயமான நிபந்தனைகளேற்பட வேண்டுமென்று சிலர் அபிப்பிராயப்பட்டிருக்கிறுர்கள். இதைப்பற்றி விவரமாய் எழுதிமுடிக்க இப்பொழுது சந்தர்ப்பமில்லை. ஆகிலும் ஒன்றிரண்டு சங்கதிகளைச் சுருக்கமாய்ச் சூசிப்பிக்கலாம். சொத்து, குடும்பத்திலும் ராச்சியத்திலுமுள்ள நிலைமை, ஒவ்வொருவர் செய்யும் வேலையும் அதன்கூலியு

மாகிய இவைகளிற் சமத்துவத்தைச்சட்டநிபந்தனைகளின் கட்டாயத்தினாலும் துரைத்தனத்தை வகிப்பவரின் வலிமையினாலும் மாத்திரமே பலாத்காரமாய்ப் பெறக்கூடியது. ஏனெனில், தங்களுடைய குணாதிசயங்களில் மனிதருக்குள் வெகு தாரதம்மியமிருப்பதினால், அவர் செய்யும் வேலையின்திறமையிலும் அவர் சம்பாதிக்குஞ் சொத்திலும் அவருக்குக் கிடைக்கும் சுகத்திலும் வித்தியாசமுண்டாகுமென்பதற்குச் சந்தேகமில்லை. இதைச் சட்ட நிபந்தனைகளைக்கொண்டு தடுப்பதினால் மனிதருள் சுயேச்சையே மாய்ந்துவிடும். மேலும் மனிதருள் விளங்கு முயர்வு தாழ்வுகளை யிகழ்வதினால் அவருக்குள்ள ஊக்கங்குலைந்து அவர் தங்களுடைய திறமை முழுவதையும் தம்வேலைகளிற் செலுத்தாது தளர்ச்சியைப் பாராட்டுவர். அதனால் உலகத்திற் செல்வம், சுகம் முதலியவை விருத்தியடையாமற்போம். இதுமாத்திரமல்ல; மனிதருக்குள் அதிருப்தி மிகுந்து கலகங்களுண்டாவதனால் துரைத்தன முறையழிந்து சங்கத்தின் ஸ்திரத்திற்கே அபாயம் நேரிடலாம். மேலும் மனிதருக்குள்ள முதலையும், அவரவருடைய வேலைத்திறமைக்குத் தக்கபடி கிடைக்குங் கூலியையும், அவரவருடைய குணாதிசயங்களுக்குத் தக்கபடி தங்களுடைய இனத்தாருட் கிடைக்குஞ் சுகம், அதிகாரம் முதலியவற்றையும், மேற்கூறியபடி கட்டாயஞ்செய்து சமமாக்குவது நியாயமாவென்பதைப்பற்றித் தீர்க்காலோசனை செய்யவேண்டும்.

இவ்விஷயங்களிற் சமத்துவத்தைப் பெறுவதற்குப் பலர் பல ஏற்பாடுகளைத் திட்டஞ்செய்தும் நடபடிக்கைக்குக் கொண்டுவரப் பலவாறு முயன்றும் அவைகளுக்குரிய குணாகுணங்களை விளக்கிக் காட்டி யிருக்கிறார்கள். அவைகளைக் குறித்து விவரிக்கவும், அவைகளின்பிழைகளை யெடுத்துக்காட்டவும் இப்பொழுது சந்தர்ப்பமில்லை.

இராச்சியத்திலுள்ளவருக்கெல்லாம் சுதந்தரங்கள் சமமென்று இப்பொழுது கூறுவதால் நமதுகருத்து யாதெனில், சொத்தைச் சம்பாதித்துக்கொள்ளுவதிலும், பிறரோடு உடன்படிக்கை செய்துகொள்ளுவதிலும், தம்முடலைக் காப்பாற்றிக்கொள்ளுவதிலும், தம்மனதிற்குச் சரியென்று தோன்றியபடி தங்கள் தோழர்களைத் தெரிந்தெடுத்துக்கொள்ளுவதிலும், தங்கள் மதக்கோட்பாட்டை யேற்படுத்திக் கொள்ளுவதிலும், வேறுசில சாமானிய விஷயங்களிலும், பிறருடையநிர்ப்பந்தமின்றிச் சட்டநிபந்தனைகளாலேற்பட்ட விலக்குகளுக்குமாத்திர முட்பட்டு நடந்துகொள்ளச் சுதந்தர முண்டென்பதே.

சில இராச்சியங்களில் சுயவரசாட்சியெனுஞ் சுதந்தரத்தைச் சனங்களனுபவித்து வருகிறார்கள். அதாவது, துரைத்தனத்தை நடத்தும் ஆலோசனைசபையாரைத் தெரிந்தெடுத்து வருவதாம். முன் கூறப்பட்ட சுதந்தரங்களைப்போல் இச்சுதந்திரம் யாவர்க்குஞ் சமமென்று சொல்லக்கூடாது. இப்பொழுது ஆங்கிலேய நாட்டில் 35-கோடி மனிதருள் 5-கோடி மனிதருக்கு மாத்திரமே இச்சுதந்தரமுண்டு; 8-வருடங்களுக்குமுன் 2-கோடிஜனங்களே இச்சுதந்தரத்தைச் செலுத்திவந்தார்கள்; 60-வருடங்களுக்குமுன் ½-கோடி ஜனங்களுக்கு மாத்திரமே இச்சுதந்தரமுண்டு. இச்சுதந்தரம் ஜனங்களின் சொத்தினளவிற்குத் தக்கபடி அங்கிலேயநாட்டில் எக்காலத்தும் செலுத்தப்பட்டு வந்திருக்கிறது. வேறுசிலஇராச்சியங்களில் பகுத்தறிவதற்குரிய பருவம்முதிர்ந்தவுடனே சனங்களிச் சுதந்தரத்தைச் செலுத்திவருகிறார்கள். துரைத்தனத்தில் உத்தியோகம்பெற்று அதிகாரஞ் செலுத்துவதற்குரிய சுதந்தரம் அவரவர்களுடைய குணாதிசயங்களை மாத்திரம் ஒத்திருக்கிறது. முற்கூறிய சுதந்தரங்களைப்போல் இச்சுதந்தரமும் யாவருக்குங் கிடைக்கக்கூடியதல்ல; சனங்களுடைய அனுமதியினாலுங் கிடைக்கக்கூடியதல்ல; நியமிக்குமதிகாரத்தை வகித்தவரால்மாத்திரமே கிடைக்கக்கூடியது.

16. மனிதர் சுதந்தரங்களைக் கைக்கொண்டு அவற்றை நிறைவேற்றிக்கொள்ளுவதே புருஷார்த்தமென நினைத்துவிட்டால் உலகத்தில் அன்பினால்மாத்திரம் பிறர்க்குழைத்து அதனால் அவருக்குக் கிடைக்கும் சுகத்தைக் கண்குளிரக்கண்டு களிப்படைந்து கடவுளின் கிருபைக்

குப் பாத்திரமாகுந்தன்மை மாண்டுவிடுமென்றும் தற்சுகத்தில்மாத்திரமே சனங்கள் தமது நோக்கத்தைச் செலுத்தி விடுவார்களென்றும் சிலர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். (Italy) இட்டலி தேசத்தில் 50-வருடங்களுக்குமுன் தன் வாழ்நாள்முழுவதும் தன்செல்வம் சுகமெல்லாவற்றையு மிகழ்ந்து சுதேசத்திற்குப் பாடுபட்டு மகிமையடைந்த தேசாபிமானியாகிய மாட்ஸினி (Mazzini) யென்னும் மகான் மேற்கூறிய அபிப்பிராயத்தைப் பலவாறு வற்புறுத்திக் கூறியிருக்கிறார். 1789—92 வருடங்களில் பிரெஞ்சுக்காரர் தங்கள்தேசவொழுங்கை மாற்றுவதற்குச் செய்த கொடுங்கலகத்தைத் தூண்டிவிட்ட இலக்கியங்களின் பிரதானகருத்தும் அச்செய்கைநேரிட்டபின் ஐரோப்பியசனங்கள் இதுவரையில் முக்கியமாய்க் கொண்டாடுவதும் யாதெனில், சுதந்திரங்களை ஒவ்வொருவரும் பரிபூரணமாகக்கைக்கொள்ளுவதே புருஷார்த்தமென்னும் இச்சித்தாந்தமே. மாட்ஸினி என்பவர் தன்னினத்தாருக்குப் பின்வருமாறு ஒருதருணத்தில்நற்புத்திகூறினார்:-"மகா சனங்களே! 50-வருடகாலமாய் ஐரோப்பாகண்டத்தில் கொடுங்கோல்மன்னரும் பிறவிப்பெருமையுடையவரும் ஆக்கிரமித்து வந்த அதிகாரங்கள் குலைந்து நமக்குள் நடந்திருக்கும் சீர்திருத்த மெல்லாவற்றிற்கும் மூலாதாரம் யாதெனில், மனிதர் தமக்குரித்தாகிய சுதந்தரங்களைக் கைக்கொண்டாலன்றி இகத்திற் சுகமில்லையென்னுஞ் சித்தாந்தமே. சனங்களின் சுயாதீனத்திற்கு விரோதமான தடைகளெல்லாம் நாசமடைந்து சுயாதீனம் நாள்தோறும் மிகுந்து வருகின்றது. ஆகிலும் தினந்தவறாது உழைத்துப்பிழைக்கும் கணக்கில்லாதசனங்களுக்குச் சுகானுபவம் எள்ளளவாகிலும் விருத்தியடைந்திருக்கிறதா? இல்லை. அநேகமாய் எல்லாத் தேசங்களிலும் சீவனங்கழிக்க இன்றியமையாத சாமான்களுக்கெல்லாம் விலை யுயர்ந்திருக்கின்றது; அநேக கைத்தொழில்களில் வேலைக்காரர்களின் கூலி நாளுக்குநாள் குறைந்துகொண்டு வருகின்றது; கூலிக்கு வேலை கிடைப்பதும் வரவர அரிதாய்க் கொண்டுவருகிறது. ஒவ்வொரு சங்கத்திலும் செல்வத்தின்தொகையும் சுகானுபவத்திற்கு வேண்டியகருவிகளும் தாராளமாய் விருத்தியாய்க்கொண்டு வருகின்றன. பணக்காரருக்கு நாளுக்குநாள் செல்வம் மிகுவதும் ஏழைகளுக்கு வறுமை மிகுவதுமாகிய இக்காட்சிகளை நாமெவ்விடத்துங் காண்கிறோம்." இப்படி மாட்ஸினி என்பவர் பரிதபித்துக் கூறியபின் மனிதரின் நிலைமையைச் சீர்திருத்தற்குரிய நிவர்த்தியைப் பின்வருமாறு தனது சொந்த அபிப்பிராயமாய்க் கூறியிருக்கிறார்:—"எல்லாமனிதரும் கடவுளொருவரின் புத்திரரென்றும்; அவர் ஆக்கினையால் நியமிக்கப்பட்டிருக்கும் மானிட தருமத்தை நிறைவேற்ற நாமுடன்பட்டிருக்கிறோமென்றும்; அநீதியைக்களைந்து நமதுசகோதரருக்கு உபகாரம் செய்வதே ஒவ்வொருவருக்குஞ் சுதந்தரமாவதுமன்றி அவருக்குரிய மானிடதருமம் (அல்லது கடமை) ஆகப் பாவிக்கவேண்டுமென்றும்; அத்தருமத்தை உறுதியாய்க் கைக்கொள்ளல் இச்சன்மத்திற்குரியதென்றும், அதைக் கைவிடல் கொடும்பாவமென்றும் எல்லாமனிதருக்கும் நாம் வற்புறுத்திக் கூறவேண்டும். சகோதரர்களே! தங்களுடைய சுதந்தரங்களை யிழந்துவிடும்படி நான் சொல்லவந்தவனல்ல. ஒவ்வொருவரும் தமதுகடமைகளை நிறைவேற்றினால், ஒவ்வொருவருக்கும் சுதந்தரங்களும் தவறாது கிட்டுமென்று துணிந்து நமதுகடமைகளைச் செய்வதையே நாம் முதலிற் கவனிக்க வேண்டியதென்பது எனதபிப்பிராயம். தமது சுகத்தைக் கைக்கொள்ளுவதையே பிரதமதருமமாய்க் கருதினால், மனிதர் பரோபகாரத்தை மறந்துவிடும்படி நேரிடும்; உலகத்தில் இப்பொழுதுவிளங்கும் கஷ்டநிஷ்டூரங்கள் நிரந்தரமாய்க் குடியேறிவிடும்."

மாட்ஸினி என்பவர் இவ்வாறு சொல்லியிருப்பதில் நிரம்ப வுண்மையுளதென்பதற் கையமில்லை. ஆகிலும் அது முற்றிலுமொத்துக் கொள்ளத் தக்கதல்ல. ஏனெனில், சுதந்தரங்களும் கடமைகளும் மனிதருக்குச் சமமாகவே ஏற்பட்டிருக்கின்றன. ஒன்றைத்துறந்து மற்றதைமாத்திரம் கைக்கொள்ளுவது சரியல்ல. அவை யிரண்டினிலக்கணங்களில் வேறுபாடிருந்தாலும் பரஸ்பரவிரோதமில்லை. சிலவிடங்களிற் கடமைகளைச்செய்வது உயர்ந்த தருமமாயும், சிலவிடங்களிற் சுதந்தரங்களைக் கைவி

டாது நிறைவேற்றிக்கொள்ளுவது உயர்ந்தசருமமாயும் விளங்குகிறதென்பதற்குச் சந்தேகமில்லை. நாம் சமயோசிதமாய் நடந்துகொள்ள வேண்டியது. இதைத்தவிர்த்து வேறு அபிப்பிராயங்களுக்குத் தகுந்த ஆதாரமில்லை. அவைகளை எல்லாரும் தம்முலகவாழ்க்கைக்கு விதியாகக்கொண்டு நடந்தால் வேலைக்காரரின் ஊக்கமும், சொத்தின்காப்பும், குடும்பத்திலுள்ள நேசமுஞ்சுகமும் ராச்சியத்திற் குடிகளுக்குரிய சுதந்தரங்களும் நாளடைவிற் குலைந்து சங்கத்தினழிவிற்கேதுவாய்த் தீர்ந்துவிடும்.

17. மனிதருக்குரிய சுதந்திரங்கள் தேசகாலவர்த்தமானங்களுக்குத் தக்கபடி சில எல்லைகளுக்கும் விலக்குகளுக்கு முட்பட்டு செலுத்தப்பட்டு வருகின்றன. பகுத்தறிவதற்குரிய முதிர்ந்த பருவமடையாதிருத்தல், உடலினுறுப்புகளிலொன்றில்லாதிருத்தல், வியாதியினால் வருந்தல் முதலிய பலகாரணங்களால் ஒருவன் தன் சுதந்தரங்களைச் சிலநாள் அல்லது முற்றிலும் இழந்திருக்கலாம். சிலருக்குப் பைத்தியம் பிடித்தாவது ஸ்திரபுத்தி யில்லாததினாலாவது சிலவிஷயங்களில் தங்கள்தங்கள் சுதந்தரத்தையிழந்துவிடலாம். ஒருவிஷயத்தில் ஒருதரம் சுதந்தரத்தைச் செலுத்துவதினால் மறுபடி அதைச்செலுத்தாது தடுக்கப்படலாம்; உதாரணமாக, நாளை காலையில் 8-மணிமுதல் பகல் முழுவதும் ஒருவேலைக்காரனை நியமித்து அவனோடுடன்படிக்கை செய்தபிறகு அன்று 8-மணிக்குமுன்னும் முற்கூறியவனிடத்தில் ஒரு தவறும் காணாதிருக்கையிலும் மற்றொருவனை நியமிப்பது தகாது. சிலசமயங்களில் ஒருவன் தன்சுதந்தரத்தைக் கைவிட்டால், அது அவனுக்கு மறுபடி கிடைக்காமற்போகலாம். உதாரணமாக: ஒருபசுவைத் தானஞ்செய்துவிட்டால் மறுபடி அதைப் பணங்கொடுத்துவாங்காமலும், தானம்வாங்கினவன் அதைத் திரும்பிக் கொடுக்காமலுமிருந்துவிட்டால், அப்பசுவிற்குள்ள சுதந்தரம் நமக்கு மீண்டுவருவதில்லை. சொத்திற்குரிய சுதந்தரமிருப்பதால் எல்லாருக்குஞ் சொத்திற்குப் பாத்தியமுண்டென்றும், ஒன்றுமில்லாத தரித்திரனுக்குத் துரைத்தனத்தார் நிலத்தையாவது வேறு சொத்தையாவது அவனுக்குக் கொடுக்கவேண்டியதென்றும் கொள்ளக்கூடாது. சுதேசிகளுக்குள்ள சுதந்திரங்களையெல்லாம் அன்னியருக்குக்கொடுப்பது தற்காலத்து நாகரீக முறையின்படி வழக்கமில்லை. துரைத்தனத்தார் வரிவாங்காது ஆளுகையைச் செலுத்துவது அசாத்தியமாதலால், சொத்திற்குரிய சுதந்தரம் வரிகொடுப்பதால் ஒருவாறு குறைந்துபோவதாய்க்கூறலாம். மேலும் ஜர்மனி முதலியதேசங்களில் குடிகள் யாவரும் கட்டாயமாய்ச் சிலகால மிராணுவத்திற் சேவிக்கவேண்டுமென்று நிபந்தனை யேற்பட்டிருக்கிறது; இதுவும் மனிதருக்குச் சொத்திலும் தங்களுடலிலுமுள்ள பூரண சுதந்தரத்திற்கு ஒரு விலக்காகின்றது. வேறுவிலக்குகள் பிரத்தியேக சுதந்தரங்களைப்பற்றி யெழுதுங்கால் ஆங்காங்கு விளங்கும்.

18. ஒவ்வொருவருக்கும் அவரவர் சுதந்தரங்களைத் தெளிவாகக்குறித்தும், துயிலுறாது அவற்றைப்பாதுகாத்தும், மற்றோர் அவைகளை மீறிநடக்குங்காலத்துத் தகுந்த நிவர்த்தியைச் செய்தும், சனங்களைப் பரிபாலித்துவருவதற்கு நியாயமென்றும் பட்சபாதமின்மை யென்றும் பெயர். நியாய மெவ்விராச்சியத்திற் குடிகொள்ளுகிறதோ அவ்விராச்சியத்தில்தான் சனங்களுக்குச் சுயாதீனம் புலப்பட்டு விளங்கும். எம்மட்டு நியாயங்குறைகிறதோ அம்மட்டும் சனங்களுக்கு அடிமைகளினிலக்கணம் விருத்தியாய்விடும். மேலும் எத்தேசத்தில் சனங்கள் தங்கள்சுதந்தரங்களைப் பாதுகாத்துக்கொள்ளாமலும் பிறருடைய சுதந்தரங்களை மதிக்காது நடப்பதாலுண்டாகும் தீங்குகளை யறியாமலுமிருக்கிறார்களோ அத்தேசத்து ஜனங்களுள் குலீனருக்*குரிய மரியாதையென்று உலகத்திற் கொண்டாடும் நற்குணம்விலகி இழிவான பல துர்க்குணங்களும் நடைகளும் பாவனைகளும் வரைமீறி மிகுந்துவிடுமென்பதற்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

கி. சுந்தரராமன் எம். ஏ.

---

## நடுவேனிற்கனவு.

### மூன்றாவது அங்கம்.

---

2-ம் இடம்.—காட்டில் வேறொருபாகம்.

[ஒபரான் வருதல்.]

ஒபரான்.—டிடேனியா விழித்தாளோ! விழித்து யாரைப்பார்த்து ஆசை கொண்டலைகிறாளோ!

---

* குலீனர்=குலமுளோர்=நற்குலமுள்ளவர்.

[பக் வருதல்.]

இதோ வருகிறுன் என் தூதன். ஓ! பித்துப் பிடித்தபேயே, நாமிருக்கும் இச்சோலையில்இன் றிரவில் ஏதேனும் விசேஷம் நடந்ததுண்டெ னிற் கூறுக.

பக்.—என் அரசி ஒரு மகா விரூபிமேல் ஆசை கொண்டிருக்கிறுள். அவள் உறங்குகை யில், அவளிருக்கும் பூஞ்சோலைக்கருகில் ஆதெ ன்ஸ் நகரத்துப் பணிக்களரியில் வேலை செய்து பிழைக்கும் சில கைத்தொழிலாளிகள் வந்து, அரசனது கலியாணநாளிரவில் தாம் அவன் முன் ஆட நிச்சயத்திருக்கும் களிக்கூத்தை ஒருமுறை ஆடிச் சரிபார்த்துக்கொள்ளத் தொ டங்கினுர்கள். அப்பொழுது அவ்வாட்டத்தில் 'பிரமஸ்' வேஷம் போடுபவன் தான் சொல்வ தைச் சொல்லிவிட்டு அவர் கூட்டத்தினின்றும் சோலைக்குள் வர, நான் அச்சமயம் பார்த்து அவனுக்குக் கழுதைமுகம் உண்டாகும்படி செய்தேன். அவன் திரும்பி அவர் கூட்டத்துள் போகவே அக்கோர ரூபத்தைக்கண்டு எல்லோ ரும் பயந்து நடுங்கி ஒருவர் மேலொருவர் விழு ந்து தமோறி காட்டில் கல்லிலும் முள்ளிலும் போய்த் தங்கள் உடை முதலியவற்றைக் கிழித் துக்கொண்டு ஓடினுர்கள். இவ்வாரவாரத்தில் டிடேனியா உறக்கமுணர்ந்து அக்கழுதைத்தலை யோன் முகத்தில் விழித்தாள். விழித்ததுமுதல் அவன்மேல் ஆசைமிகுந்திருக்கிறுள்.

ஒபரான்.—நான் நினைத்ததிலும் இஃது இன் னும் அதிகநன்றுய் முடிந்தது. நான் சொல்லிய வண்ணம் ஆதென்ஸ் நகரத்தோன் கண்களில் நேசரசத்தைப் பிழிந்தாயோ?

பக்.—அதுவும் ஆயிற்று. அவனுறங்கினுன்; அம்மாதும் அவனருகில் உறங்கினுள்; அவன் உணர்ந்து அவள் முகத்திலேயே விழித்திருப் பான்.

[ஹேர்ம்யாவும் டெமிட்ரியஸ்ஸுடும் வருதல்.]

ஒபரான்.—மறைந்து நில். இவன்தான் நான் சொல்லிய அவ்வாதென்ஸ் நகரத்தோன்.

பக்.—நான் கண்டமாது இவளே; மனிதன் இவனல்லன்.

டெமிட்ரியஸ்.—உன்னை நேசிப்பவனை நீ ஏன் இவ்வாறு கடிந்து பேசுகிறுய்; இஃது உன் பகை வரிடத்துச் சொல்லவேண்டிய பேச்சன்றே?

ஹேர்ம்யா.—உன்னை இப்பொழுது கடிந்து பேசினேன்; உனக்கு இன்னும் செய்யத்தக்கது வேறுளது; நாசமுற உன்னைச் சபிக்கவேண்டும். என் லைஸாண்டரைக் கொன்றதுண்டெனின், என்னையுங்கொன்று நீ மேற்கொண்ட கொலைத் தொழிலை முற்றும் நிறைவேற்று. அவன் என்னி டத்து உறுதியான உண்மையுடையோன்; பக லினிடத்தும் பகலவனுக்கும் அவ்வளவு உறுதி யில்லை; யான் உறங்குகையில் என்னைவிட்டு நீங் கான்; ஆதலின், நீ அவனைக்கொன்றுயென்றே எண்ணுகிறேன். உன் பார்வை கொலைக்காரன் பார்வைபோல் உற்சாகமிழந்து பயங்கரமாய்க் காணப்படுகின்றது.

டெமிட்ரியஸ்.—உன் கொடுமையாற் கொலை யுண்டவன் பார்வையையுடையேன். என்னைக் கொலைசெய்தவளாகிய நீ ஆங்குத் தோன்றும் வெள்ளிபோல் நிர்மலமாய் ஒளி வீசுகின்றுய்.

ஹேர்ம்யா.—இம்மொழியால் என் லைசாண் டரின் செய்தி எவ்வாறு விளங்குகின்றது? அவ ன் எங்கே? நற்குணமுள்ள டெமிட்ரியஸ்ஸே அவனை நீ எனக்கு நல்குவையோ?

டெமிட்ரியஸ்.—அவன் பிணத்தை நாய்க்கெ றிவேன்.

ஹேர்ம்யா.—அடா நாயே, என்னைப் பெண் பாலார்க்குரிய வரம்புகடந்து பேசச் செய்கின் றுய். அவனைக்கொன்றுயோ? பாவி! அவன் உயி ருள்ளோர் கூட்டத்தில் இல்லாதவனுனனே! உண்மை கூறு; என் பொருட்டாயினும் ஒரு மு றை உண்மை கூறு; அவன் உறக்கமுணர்ந்து எழுந்தபின் அவன் முகத்தை எதிட்டுப்பார்க் கத் துணிந்தாயோ? அவன் உறங்குகையிற் கொன்றுயோ? ஆ, என்ன வீரம்! இதை ஒரு புழுவும் செய்யாதோ? மானிடப்பாம்பே. இரட் டை நாவுடைய இழிந்த பாம்பும் செய்யாத கா ரியமடா பாவி இது!

டெமிட்ரியஸ்.—உன் கோபத்தை இடமறியா மல் ஏன் என்மேல் தாக்குகிறுய்? லைஸாண்டர் வழிக்கு நான் போனவனல்லன்; அவன் இறந் தவனல்லனென்றும் அறிகிறேன்.

ஹேர்ம்யா.—ஆனுல் அவன் சுகமாயிருக்கி றுனே? உன்னை வருந்திக்கேட்கிறேன்; சொல் லுக.

டெமீட்ரியஸ்.—அதைச் சொல்வதற்கு எனக்கு நீ உதவும் கைம்மாறு யாதோ?

ஹெர்ம்யா:—நீ என் முகத்தில் விழியாதொழிவதே இதற்குக் கைம்மாறு. துரோகீ, உன் முன் நிற்காமல் இதோ போகின்றேன். (போதல்)

டெமீட்ரியஸ்.—அவளுடைய இக்கோப வெறியில் உடன் செல்லல் உசிதமன்று. இவ்விடத்திற் சற்றிருந்து இளைப்பாறுவேன். துக்கத்தின் கடுமையை ஒருவாறு தணிக்கும் உறக்கம் வருகின்றது. (கீழே படுத்து உறங்குதல்)

ஒபரான்.—பக்கே, நீ என்ன காரியஞ் செய்தாய்? தவறிப்போய் நேசமுள்ளவன் கண்ணில் நேசரசத்தைப் பிழிந்தமையின், நேசமில்லாவிடத்து நேசத்தை உண்டாக்காமல் நேசமுள்ளவிடத்து நேசத்தைக் கெடுத்தாய்.

பக்.—உலகத்தில், தான் செய்த பிரதிக்கினைக்குத் தக்கபடி நடப்பவன் ஒருவன்; செய்த பிரதிக்கினையை மீறி ஒன்றின்பின் ஒன்றாகப் பொய்ப்பிரதிக்கினை செய்துகொண்டே இருப்பவர் பத்துலக்ஷம் பேர்கள்: இதுவே விதியின் சங்கற்பமெனத்தோற்றுகின்றது.

ஒபரான்.—நன்று; நீ இப்பொழுது இக்காட்டில் காற்றினும் அதிகவேகமாய்ச் சென்று, காமநோயால் முகம்வெளுத்துப் பெருமூச்செறிந்து இரத்தம் குறைந்து வருந்துகின்ற ஹெலனா வென்னும் ஆதென்ஸ் மாதைத்தேடி எவ்வுபாயத்தாலேனும் அவளை இவ்விடத்திற் கொண்டு வந்து சேர்ப்பிப்பாயின், நான் இவன் கண்களை நேசரசத்தால் மயக்கி, அவளைக்கண்டு காதல் கொள்ளச் செய்வேன்.

பக்.—இதோ போவேன். அம்பினும் வேகமாய் நான் அரை நொடியிற் போவதைப்பாரும். (பக்-போதல்.)

ஒபரான்.—இச்செம்மலரின் இரசத்தைஉன் கண்மணியிற் பிழிவேன். நீ உறக்கமுணர்ந்து அவள் முகத்தில் விழிக்கையில், அவள்உனக்கு வானத்து வெளிபோற் பெருஞ் சோதியாய்விளங்க, நீ மாரன் வாளியாற் புண்பட்டு அப்புண்ணையாற்றும் மருந்தை அவளிடத்து இரப்பாயாக.

[பக் பின்னும் வருதல்.]

பக்.—என் கந்தர்வத்தலைவ, ஹெலனா இதோ வருகிறாள்; நான் தவறி இரசம்பிழிந்த வாலிபனும், தான் அவள்மேற் கொண்டிருக்கும் காதலுக்குக் கூலியாக அவள் ஒரு முத்தந்தாராளோவென்று அவளிடத்து இரந்து நடக்கின்றான். இவ்விநோதக் காட்சியைக் காண்போமோ? ஆ! மானிடர்கள் என்ன மூடர்கள்.

ஒபரான்.—விலகி நில்; அவர்கள் செய்யும் அரவம் டெமிட்ரியஸ்ஸை எழுப்பிவிடும்.

பக்.—அப்பொழுது இருவரும் ஒருத்திமேல் நேசங்கொண்டவராவர். அதுவும் ஒரு வேடிக்கையே? இவ்வாறு தாறுமாறாய் நேருவதில் எனக்கு நிரம்பச் சந்தோஷம்.

[லைஸாண்டரும் ஹெலனாவும் வருதல்.]

லைசாண்டர்.—உன்னைப்பழிப்பாக நேசிக்கிறேனென்று ஏன் எண்ணுகிறாய்? கண்ணீர் விட்டுக் கதறுகையில் அதைப்பழிப்பு என்னலாமோ? நான் நேசப்பிரதிக்கினை செய்யும்பொழுது கண்ணீர் விடுவதைக் காண்கின்றாயே; இவ்வாறு கண்ணீரோடு பிறக்கும் பிரதிக்கினை உண்மையானதன்றிப் பிறிதொன்றாமோ?உண்மையான நேசத்துக்குரிய அடையாளங்களைக் காணும்பொழுதும் அவை என்னிடத்திற் பொய்யென்றும், என் நேசம் பொய்ந்நேசமென்றும் உனக்கு ஏன் தோற்றுகிறதோ?

ஹெலனா.—வரவர உன் கபடம் அதிகரிக்கின்றது. முன்னுக்குப்பின் விரோதமாய்ப் பிரதிக்கினை செய்கிறாய். ஹெர்ம்யாவுக்குச் செய்து கொடுத்த பிரதிக்கினை யாதாயிற்று? அவளை விட்டாயோ? நீ நிலையற்றவன். அவளிடத்தும் பிரதிக்கினை என்னிடத்தும் பிரதிக்கினையா? ஒன்றோடொன்று தூக்கிப்பார்; எது அதிக கனமுடையது? உனக்கு எல்லாம் வெறுங் கட்டுக் கதையைப்போற் கனமில்லாதனவேயாம்.

லைசாண்டர்.—அவளுக்குப் பிரதிக்கினை செய்து கொடுக்கும் பொழுது எனக்கு விவேகமில்லை.

ஹெலனா.—இப்பொழுது அவளை விடுவதில் விவேகமுள்ளாயென்றும் நான் எண்ணவில்லை.

லைசாண்டர்.—டெமிட்ரியஸ் அவளை நேசிக்கிறான்; உன்னை நேசிக்கவில்லை.

டெமீட்ரியஸ்.—(விழித்து) ஓ! ஹெலன்! ஓ! தேவி! வனதேவதையே! உத்தமோத்தமீ!என் காதலியே, உன் நிர்மலமான கண்களுக்கு ஒப்பாவதுயாது? பளிங்கும் கலக்கமுள்ளதே. உன்

இரண்டு உதடுகளும் காண்போர் காதலிக்கும்படி பழுத்த கோவைப்பழம்போற் சிவந்துதோன்றுகின்றன. 'டாரெஸ்' மலையுச்சியில்உறைந்து கீழ்காற்றால் அசுத்தம் நீங்கி வெள்ளென வெளுத்திருக்கும் பனிக்கட்டியும் நீ கையை நீட்டுகையில் காக்கைபோற் கறுத்துத் தோன்றுகின்றது. இக்கையை, வெண்மைக்கரசை, என்னன்பிற்கு உறுதி நல்கும் இவ்வின்ப முத்திரையை முத்தமிடுகின்றேன்.

ஹெலனா.—ஓ! இஃதென்ன துன்பம்! நீங்கள் இருவரும் என்னைப்பழித்து மகிழ்வுறக் கருதினீர். மரியாதையுள்ளவராயின் நீங்கள் எனக்கு இத்தீங்கிழையீர். நீ என்னை வெறுப்பதை யான் அறிவேன்; அப்படியே வெறுத்திராமல் என்னைப் பழிப்பவரோடு சேர்ந்து கொள்ளல்வேண்டுமோ? புறத்தோற்றத்திற்கு மனிதரைப்போற் காணப்படுகின்றீரே! உண்மையிலும் அவ்வாறு இருப்பீராயின், சாதுவான குலமாதை இவ்வாறு பழித்தல் உங்களுக்கு அடுக்காது. என்னை நீ மனப்பூர்வமாய் வெறுக்கிறாயென்பது எனக்கு நிச்சயமாய்த் தெரிந்திருக்க, இத்தனை பிரதிக்கினையும், பிரமாணமும், என்னைப்பற்றி அளவில்லாப் புகழ்ச்சியும் செய்வது எதற்காக? நீங்கள் ஒருவருக்கொருவர் எதிரிகளாயிருந்து ஹெர்ம்யாவை நேசிப்பதுபோல், என்னைப் பழிப்பதிலும் அவ்வாறே எதிரிகளானீர்களோ? என்ன தீரமான காரியம்! பேதைப்பெண்ணைப் பழித்துக் கண்ணீர்விடச்செய்யும் ஆண்பிள்ளையின் வீரம் என்ன வீரம்!

லைசாண்டர்.—டெமிட்ரியஸ், நீ இரக்கமற்றவன்; நீ ஹெர்ம்யாவை நேசிக்கின்றாய்; அஃது எனக்குத் தெரியுமென்பதை நீ அறிவாய். இப்பொழுது மனப்பூர்வமாய் என்னுள்ளன்போடு எனக்கு ஹெர்ம்யாவின்மேலுள்ள நேசத்தை உனக்கு விட்டுவிடுவேன்; அப்படியே நீ, உனக்கு ஹெலனாவின்மேலுள்ள நேசத்தை எனக்கு விட்டுவிடு. அவள்மேல் எனக்குள்ள ஆசை என்னுயிர் உள்ள அளவும் விடாது.

டெமிட்ரியஸ்.—உன் ஹெர்ம்யாவை நீயே வைத்துக்கொள்; நான் வேண்டேன். அவளை நான் நேசித்த துண்டெனின் அந்நேசம் இப்பொழுது போய்விட்டது. இருப்பிடம் விட்டு அலையும் வழிப்போக்கனைப்போல் என் நேசம் சிறிதுகாலம் அவளிடத்திற் சஞ்சரித்து இப்பொழுது ஹெலனாவென்னும் இருப்பிடத்தை யடைந்து நிலைபெற்று நிற்கின்றது.

லைசாண்டர்.—ஹெலனா, இஃது உண்மையன்று.

டெமிட்ரியஸ்.—என்[illegible]தீகளை ஏன் [illegible]அறிவாயோ?
அறியாததைப்பற்றி [illegible]வையா? ஏனோ? ஆ[illegible]ப் பேசுகி
றாய்? இனி அப்படி [illegible]ர்த்தியில் தன்னையும் எ
சும்மா இரேன், நீ நேசிப்ப[illegible]பார்த்து கட்டழகு
றாள் பார். [illegible]ந்திருக்கிறா[illegible]ல்

[ஹெர்ம்யா பின்னும் வருதல்.]

ஹெர்ம்யா.—கண்ணின்காட்சியைக் குறைக்கும் இவ்விருண்ட இரவானது காதிற்கு அதிக சக்தியை உண்டுபண்ணுகின்றது. கண்ணின் பார்வை குறையுமிடத்து அதற்கீடாகக்காதின் கேள்வி இரண்டுமடங்காகின்றது. லைஸாண்டரே, உன்னை நான் கண்ணிற்காணாவிடினும் உன் குரலைக் காதாற்கேட்டு உன்னிடத்து வருகிறேன். என்னை ஏன் இரக்கமின்றி அப்படிவிட்டகன்றாய்?

லைஸாண்டர்.—ஆசை துரத்தும்பொழுது அவன் அங்கு நிற்பானோ?

ஹெர்ம்யா.—என்னருகினின்றும் லைஸாண்டரைத் துரத்தும் வன்மையுள்ள ஆசையுமுளதோ?

லைஸாண்டர்.—அழகிய ஹெலனாவின் மேலுள்ள ஆசை அவனைத் துரத்தியது; அவளோ வானத்து மீனிலும் அதிக ஒளியை உடையாள். நீ என் என்னைத்தேடுகிறாய்? உன்மேலுள்ள வெறுப்பே என்னை உன்னைவிட்டு நீங்கும்படி செய்ததென்று இதனால் அறியாயோ?

ஹெர்ம்யா.—அஃது ஒருநாளுமிராது. நீ நினைக்கிறதுபோல் பேசவில்லை.

ஹெலனா.—இவளும் இக்கூட்டத்திற் சேர்ந்தவளே! என்னைப் பரிகாசஞ் செய்வதற்கு மூவரும் சேர்ந்துகொண்டார்கள். நிந்திக்கும் ஹெர்ம்யாவே, ஓ! நன்றியற்றவளே, நீயும் இவர்களோடு சேர்ந்து என்னைப் பழிப்பாயோ? நாம் மனமொத்த தோழிகளாய்க் காலங்கழித்ததை மறந்து விட்டாயோ? நம் பள்ளிக்கூடத்துறவும்

பிள்ளைப்பிராயத்து மாசற்றமனமும் போயினவோ? நாமிருவரும் ஓராசனத்திருந்து ஒரு துணியில் நம்மூசியால் ஒரே பூவேலை செய்துகொண்டும் அப்படிச்செய்யும்பொழுது, நம் கையும் விலாப்புறமும் குரலும் மனமும் ஒன்றுபட்டுள்ளனபோல் ஒருசுரத்தில் ஒரேபாட்டை இருவரும்பாடிக்கொண்[illegible] பார்வைக்குப் பிரிந்தும் பிரிக்குஞ்சருந்து இணைப்பா[illegible]ருக்கும் இரட்டைக் கனிபோ[illegible]ய ஒருவாறு தணி[illegible]டும் ஆவி ஒன்றுமாகின்றது. (இமே நம்முடைய இப்பண்

ஒபரான்.—பக்லித்து இப்பொழுது உன்ஏழைநாய்? தவசிப் இகழ்வதில் இப்புருஷரோடு சேர்வீரயா? இது நட்புக்கு நன்றன்று; கன்னிக்கு அடுக்காது; இதனால் வரும்துன்பத்தை அடைபவள் யான் ஒருத்தியாயிருப்பினும், இதற்காக உன்னைக் கடிந்துபேசும் பெண்பாலோர் பலராவர்.

ஹேர்மியா.—உன் உக்கிர மொழியைக்கேட்டு அதிசயிக்கின்றேன்; நான் உன்னைப்பழிக்கவில்லை; நீ தான் என்னைப் பழிப்பதுபோற் பேசுகிறாய்.

ஹேலனா.—என் கண்ணையும் முகத்தையும் வியந்து பழித்து, என்னைத்தொடரும்படி லைஸாண்டரை ஏவியவள் நீயன்றோ? சற்றுமுன்வரையில் என்னைக்காலால் உதைத்துத்தள்ளிய உனது மற்றொரு நேசனாகிய டெமிட்ரியஸ் என்னைத் தேவதையென்றும், திவ்வியரூபியென்றும், அரும்பொருளென்றும் கூறும்படி செய்தவள் நீயன்றோ? அவன் தான் வெறுப்பவளை ஏன் இவ்வாறுபுகழ்ந்து பேசுகிறான்? லைஸாண்டரின் மனம் உன் அன்பால் நிறைந்திருக்க, உன் அனுமதியாலும் தூண்டுதலாலுமன்றி, அவன் அவ்வன்பை மறுத்து என்னிடத்து அன்பு பாராட்டுவானேன்? உன்னைப்போல் எனக்கு அழகு இல்லையாயின் என்னை? உன்னைப்போற் காதலனைப்பெறும் அதிட்டமிலேன்; இழிவாய் அன்பில்லார்மேல் அன்புபாராட்டி அலைகின்றேனென்னினும் என்னை? இதற்கு என்னை நீ இகழ்வது முறையோ? நீ காட்டவேண்டியது இரக்கமன்றோ?

ஹேர்மியா.—நீ சொல்லியதின் பொருள் எனக்கு விளங்கவில்லை.

ஹேலனா.—நன்று என்னைப்பழிப்பதை நிறுத்தவேண்டுவதில்லை; என்னிடத்து இரக்கமுள்ளவர்கள்போலே அபிநயஞ்செய்யுங்கள். என் புறத்து முகங்காட்டி நகையுங்கள்; ஒருவருக்கொருவர் கண்ஸம்ஜ்ஞை செய்யுங்கள். எவ்விதத்திலாவது உங்கள் பரிகாசத்தை நிலைபெறச்செய்யுங்கள். சிறிதேனும் இரக்கமோ, மரியாதையோ, பெருந்தன்மையோ உடையீராயின் என்னை இப்பழிப்புக்கு ஆளாக்குவீரோ? நன்று; சுகமாயிருங்கள். இஃது என் குற்றமே; இதை மாற்றுவதற்கு இறப்பேன்; அன்றேல் இவ்விடம் விட்டுப்போவேன்.

லைஸாண்டர்.—என் குணமுள்ள ஹேலனாவே, நிற்க; நிற்க; நான் சொல்லுவதைச் சற்றுக்கேள். என்நேசமே, என்னுயிரே!

ஹேலனா.—ஓ! திவ்வியம்! திவ்வியம்!

ஹேர்மியா.—என் மதுரமே, அவளை அப்படிப் பழியாதே.

டெமிட்ரியஸ்.—ஹேர்மியாவின் பிரார்த்தனைக்கு இணங்கானாயின், என் வன்மைக்கு இணங்கச்செய்வேன்.

லைஸாண்டர்.—அவளுடைய பிரார்த்தனையிலும் உனது ஆற்றல்என்னிடத்து அதிகவலியுள்ளதோ? ஹேலனா, உன்னைநேசிக்கின்றேன்; என் இன்னுயிரானை! உன்னை நேசிக்கிறேன். எனக்கு உன்னிடத்து நேசமில்லையென்பவன் பொய்ம்மொழியனென்று அவ்வின்னுயிரைக் கொடுத்தாவது மெய்ப்பிப்பேன்.

டெமிட்ரியஸ்.—அவனிலும் நான் உன்னை அதிகமாய் நேசிக்கின்றேன்.

லைஸாண்டர்.—அப்படியானால் வா; அந்நேசத்தைத் தனிப் போரால் மெய்ப்பி.

டெமிட்ரியஸ்.—சீக்கிரம் வா.

ஹேர்மியா.—லைசாண்டர், இஃது எவ்வாறு முடியுமோ?

லைஸாண்டர்.—நீ போ; கருங்குறத்தி!

டெமிட்ரியஸ்.—என்ன பேஷஜம்செய்கிறாய்! அவளை வெறுத்துவிட்டவன்போற் காட்டுகிறாய்; ஆவேசமாய்ப் போருக்கு வருபவன்போல் வேஷம்போடுகிறாய்; வரவுமாட்டாய். போடா, வெட்கங்கெட்டவனே.

லைஸாண்டர்.—ஏ! ஏ! பூனையே! உன் கைக்கட்டைவிடு; என்னை ஏன் ஒட்டிபோல் ஒட்டிக்கொள்ளுகிறாய்? என்னை விட்டுவிடு; அன்றேல், பாம்பை உதறுவதுபோல் உன்னை உதறித்தள்ளுவேன்.

ஹெர்ம்யா.—என் இனிய அன்பே, இஃதென்ன மூர்க்கம்! என்னமாறுதல் உண்டாய்விட்டது!

லைஸாண்டர்.—உன் அன்பா! இங்கு நில்லாதே போ. கறுத்த குரூபியே, இவ்விடம்விட்டுப் போ. குமட்டும் மருந்தே, வெறுப்பான விஷமே, அகன்றுபோ.

ஹெர்ம்யா.—பரிகாசமாய்ப் பேசுகிறாயோ?

ஹெலனா.—ஆம்; நீயும் அப்படியே பேசுகிறாய்.

லைஸாண்டர்.—டெமிட்ரியஸ், நான் உன்னிடத்திற்சொல்லிய சொல் தவறேன்.

டெமிட்ரியஸ்.—நான் உன் வெறும்பேச்சை நம்பேன்; நீ உறுதிச்சீட்டு எழுதித்தரல்வேண்டும்; ஒரு பெண்பிள்ளை கட்டினகட்டை மீறிவருவதற்கு ஆற்றாதவன் நீ.

லைஸாண்டர்.—என்னை என்ன செய்யச்சொல்லுகிறாய். அவளை நான் அடிக்கவோ, புண்படுத்தவோ, கொல்லவோ? நான் அவளை எங்ஙனம் வெறுப்பினும், அவளுக்கு இவ்வாறுதீங்கு செய்யேன்.

ஹெர்ம்யா.—வெறுப்பதிலும் எனக்கு நீ செய்யக்கூடிய பெருந்தீங்கு வேறுண்டோ? என்னை வெறுக்கிறாய்; ஏன்? ஆ! கஷ்டம்! என் காதலனே, யாது நிகழ்ந்தது? நான் ஹெர்ம்யாவன்றோ? நீ லைஸாண்டர் அல்லையோ? எப்பொழுதுமுள்ள அழகை யான் இப்பொழுதும் உடையேன். இவ்விரவு தொடங்கிய பின்னரும் என்னிடத்து அன்பு நிறைந்திருந்தாயே. அதன் பின்பு என்னைவிட்டு ஏன் அகன்றாய்? உண்மையில் அகன்றாயென்று யான் எண்ணவோ?

லைஸாண்டர்.—ஆம்; என்னாணை! அப்படியே. உன்னை இனிப்பார்க்கும் விருப்பமொழிந்தேன். உன் வீணாசையை ஒழித்துவிடு; இதற்கு இனி ஐயம் வேண்டுவதில்லை. உண்மை கூறினேன். உன்னை வெறுத்து ஹெலனாவை நேசிப்பது பரிகாசமன்று.

ஹெர்ம்யா.—ஆ! கொடுமை! அடி மாயாவி! பூவரிக்கும் புழுவே, நேசக்கள்ளி, இரவில் வந்து என் காதலனது நேசத்தைக் கொள்ளைகொண்டாயோ?

ஹெலனா.—இது மிகநன்று; உனக்கு அடக்கமில்லையோ? நாணம் இழந்தாயோ? கூச்சமற்றாயோ? சிச்சீ! *பாவையே, என் நல்வாயிலிருந்து துடுக்கு வார்த்தைகளை ஏன் பறிக்கிறாய்?

ஹெர்ம்யா.—†பாவையா? ஏனோ? ஆ! அவள் சூதையறிந்தேன். வளர்த்தியில் தன்னையும் என்னையும் ஒப்பிட்டுத் தான் உயர்ந்து கட்டழகுள்ளவளென்று அவனுக்கு உபதேசித்திருக்கிறாள். நான் இவ்வளவு குறியவளாயிருத்தலால் நீ அவன் மதிப்பில் அவ்வளவு உயர்ந்தாயோ? ஏ! ஏ! வர்ணமூட்டிய முகூர்த்தக்காலே, நான் எத்தனைகுறியவள்என்பதை அறிவாயானாற்சொல்: நான் உயரத்தில் எவ்வளவு குறைந்தவளாயிருப்பினும், என் கைந்நகங்களுக்கு உன் கண்கள் எட்டும்.

ஹெலனா.—குலமக்களே, நீங்கள் என்னைப்பழிப்பவராயினும், இவள் எனக்குத் தீங்குசெய்யாது காக்க உங்களை வேண்டுகிறேன். நான் சூதுவாது ஒன்றுமறியேன்; கன்னிக்குள்ள கோழைத்தனமெல்லாம் உடையேன். அவள் என்னை அடியாது நீங்கள் காக்கவேண்டும். அவள் என்னிலும் உயரக் குறைவுள்ளவளாகையால் நான் அவளோடு சரியாய் எதிர்த்து நிற்பேனென்று நீங்கள் ஒருவேளை எண்ணுவீர்கள்.

ஹெர்ம்யா.—உயரக்குறைவுள்ளவள்! கேட்டாயோ! மறுபடியும்.

ஹெலனா.—நற்குணமுள்ள ஹெர்ம்யாவே, என்னிடத்து ஏன் இவ்வளவு கசந்திருக்கிறாய்? நான் உன்னிடத்து எப்பொழுதும் அன்புடையேனன்றோ? உன் அந்தரங்கங்களை ஒருவரிடத்தும் சொன்னதில்லையே; உனக்கு ஒரு தீங்கும் செய்ததில்லையே. ஆனால் டெமிட்ரியஸ்ஸின் மேலுள்ள நேசத்தால் நீ இக்காட்டுக்கு ஓடிவந்ததை அவனுக்கு உரைத்தேன். அவன் உன்னைத்தேடிவந்தான்; நான் நேசத்தால் அவனை

*பாவை—பிறரால் ஆட்டுவிக்கப்படுபவள்.

†உருவத்திற் சிறியவளை வெறுப்பால் பாவையென்று அழைப்பதுண்டு.

த்தொடர்ந்து வந்தேன். அவன் என்னை அதட்டினான்; இகழ்ந்தான்; அடிக்கவந்தான்; கொல்லவும் வந்தான். இப்பொழுது நீ என்னை ஒன்றும் செய்யாதிருப்பாயானால் நான் என் அறிவின்மையை நினைத்துக்கொண்டு வந்தவழியே ஊருக்குத்திரும்பிப்போவேன். உன் வழியில் இனி ஒருபொழுதும் வாரேன். நான் எவ்வளவு அறியாதவள்; மதிகெட்டவள்; நீயே பார்; நான் போய் வருகிறேன்.

ஹேர்ம்யா.—போவதற்கென்ன? உன்னைத்தடைசெய்வது யாது?

ஹெலனா.—யான் என்பின்னே விட்டுப்போகும் விவேகமில்லா நேசம்.

ஹேர்ம்யா.—லைஸாண்டரின் மேலுள்ள நேசமோ?

ஹெலனா.—டெமிட்ரியஸ்ஸின் மேலுள்ள நேசம்.

லைஸாண்டர்.—பயப்படாதே; அவள் உனக்கு ஒரு தீங்குஞ் செய்யாது நான் பாதுகாப்பேன்.

டெமிட்ரியஸ்.—ஐயா, லைஸாண்டரே, நீயும் அவளுக்குத் துணையாகவரினும், அவள் ஒரு தீங்குஞ்செய்யாது நான் காப்பேன்.

ஹெலனா.—அவள் கோபகாலத்தில் மிகக் கூர்மையும் சூழ்ச்சியுமுள்ளவள்; அவள் பள்ளிக்கூடத்திற்படிக்குங் காலத்திலேயே மகா துர்க்குணி; அவள் உருவத்திற் சிறியவளாயிருப்பினும் கோபத்தில் மிகப்பெரியவள்.

ஹேர்ம்யா.—சிறியவள் திரும்பவும்! சிறியவள், குறியவள், இவையொழிய வேறு வார்த்தையில்லை. அவள் என்னை இப்படிப் பரிகாசம் பண்ணுவதை நீயேன் பார்த்துக்கொண்டு நிற்கிறாய்? நானிதோ அவளருகிற்செல்வேன்.

லைஸாண்டர்.—குறுமணியே! சிறுவிரையே!

டெமிட்ரியஸ்.—நீயாக என் முன்னிட்டுக்கொண்டு என் ஹெலனாவுக்குப் பரிந்து செல்லுகிறாய்? உன் உபசாரத்தை அவள் வேண்டுகிறாளில்லை; வெறுக்கிறாள். அவள் வழிக்குப் போகாதே; அவளைப்பற்றியும் பேசாதே; அவளுக்கு நீ பரிந்துசெல்லவும் ஆவசியகமில்லை. அவளிடத்து இனிச் சிறிதேனும் நேசம் பாராட்டுவாயாயின், அதற்குப் பெருந்துன்பம் அனுபவிப்பாய்.

லைஸாண்டர்.—இப்பொழுது என்னை ஹேர்ம்யா கட்டிப்பிடிக்க வில்லை; உனக்கு ஆண்மையுண்டெனின் என்பின் இப்பொழுதுவா; யாருக்கு ஹெலனாவிடத்தில் அதிக உரிமையுள்ளது என்பதைத் தனிப்போரால் தெளிவோம்.

டெமிட்ரியஸ்.—வா! இதோ உன் பின் வருகிறேன். தாடையும் கன்னமும்போல் தொடர்ந்து செல்வோம். (லைஸாண்டரும் டெமிட்ரியஸ் ஸஹம் போதல்.)

ஹேர்ம்யா.—என்னம்மா! இத்தனை துன்பமும் உன்னாலே. திரும்பிப் போகாதே; நில்.

ஹெலனா.—நான் உன்னை நம்பேன்; வெறுப்பான உன்னிடத்தில் இனிநில்லேன். சண்டைக்கு உன்கைகள் வேகமுள்ளனவாயினும் ஓட்டத்துக்கு என் கால்கள் நீளமுள்ளன.

(போதல்.)

ஹேர்ம்யா.—நான் திகைக்கிறேன்; சொல்லுதற்கு எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. (போதல்.)

ஒபரான்.—இத்தனையும் உன் அசட்டையால் நேர்ந்தன. தவறித்தான் போனாயோ; அல்லது வேண்டுமென்றே இப்புரளி செய்தாயோ!

பக்.—அசரீரிகளின் அரசே, நான் தவறியே போனேன்; இதை நம்பலாம். உடையால் ஆதென்ஸ் நகரத்தோனை அடையாளங் கண்டுகொள்ளும்படி எனக்குச் சொல்லவில்லையோ? நான் ஆதென்ஸ் நகரத்தோன் கண்களிற்றான் நேசரசத்தைப் பிழிந்தேன்; அம்மட்டில் நான் செய்தது சரியே; என் மேற்குற்றமில்லை. அஃது இவ்வாறு அமைந்ததும் எனக்கு ஒருவிதத்திற் சந்தோஷமே; அவருடைய சண்டை எனக்கு வேடிக்கையாகவே இருந்தது.

ஒபரான்.—ஆதென்ஸ் நகரத்து வாலிபர் இருவரும் தனிப்போருக்கு இடந்தேடிச் செல்வதைப் பார்த்தாயோ? நீ போய் இவ்வொளி முற்றும் மறையும்படி இருண்ட மூடுபனியை உண்டாக்கி, ஒருவரை யொருவர் நெருங்காமற் செய்து லைஸாண்டரிடத்து டெமிட்ரியஸ்ஸின் குரலைக்காட்டித் திட்டியும், டெமிட்ரியஸ்ஸிடத்தில் லைஸாண்டரின் குரலைக்காட்டி நிந்தித்து

ம், அவரை வெவ்வேறு பக்கங்களில் பலவாறு அலைக்கழித்துக் களைப்பால் உறங்கச் செய்த பின்னர், லைசாண்டரின் கண்ணில் இம்மாற்றுரசத்தை பிழிக. அப்பொழுது முன்னிரசத்தாலுண்டான மயக்கம் நீங்கிக் கண்ணுக்கு இயல்பாயுள்ள பார்வையுண்டாகும். உறங்கி விழித்தபின் நடந்தன வெல்லாம் அவருக்கு விண்தோற்றம் போலவும் கனவுபோலவும் காணப்படும். பின்னர் அக்காதலர்கள் தம்முள் என்றும் விடா நேசம் பெற்று ஆதென்ஸ் நகரம் போய்ச் சேர்வார்கள். நீ இக்காரியமா யிருக்கும்பொழுது, நானும் என்மனைவியிடத்துப்போய் இந்துதேசச் சிறுவனைப்பெற்று, அவளுக்குக் கழுதை முகத்தோன்மே லுண்டாயகாதலைத் தெளிவிப்பேன்; அப்பொழுது எங்கும் சமாதானம் உண்டாகும்.

பக்.—என் கந்தர்வத்தலைவ! இதை விரைவில் நடத்தவேண்டும்; இரவு அதிவேகமாய்ச் செல்லுகின்றது. அதோ கிழக்கு வெளுக்குகின்றது. அங்குமிங்கும் அலையும்பேய்கள் கூட்டங் கூட்டமாய்த் தம் இருப்பிடமாகிய மயானத்தை அடைகின்றன. துர்மரண மடைந்தோரின் ஆவிகளாகிய பேய்கள் தம் யாக்கை இருக்கு மிடத்தை நாடிச் செல்லுகின்றன. இரவின் பாற் பிரியாநட்புள்ள இப்பேய்கள் தம் தீச்செயல்களைப் பகல் காணாதபடி, பிரகாசத்தினின்றும் தாமே ஒடியொளிக்கின்றன.

ஓபரான்.—நாம் அவ்வகைப்பேய்கள் அல்லேம். நான் எத்தனையோ முறை அருணோதயமான பின்பும் வேட்டையாடிக் கொண்டிருக்கிறேன். கீழ்த்திசையிற் கதிரவன் தோன்றித் தன் ஒளிமயமாகிய செம்மண்டலத்தினின்றும் அழகிய கிரணங்களை வீசி, பச்சை நிறமுள்ள கடலின் உவர் நீரைப் பொன்னிறமாக்குந் துணையும் நான் இச்சோலையில் உலாவி நடப்பதுண்டு. ஆயினும், தாமதியாமல் நம்காரியத்தை விடியுமுன்னரே நிறை வேற்றுவோம். (ஓபரான்-போதல்.)

பக்.—மேலுங்கீழும், கீழும்மேலும், ஊருக்கு உள்ளிலும் வெளியிலும், எங்கும் அவரை ஓடி யலையச்செய்வேன். இதோ ஒருவன் வருகிறான்.

[லைசாண்டர் மறுபடியும் வருதல்.]

லைஸாண்டர்.—செருக்குள்ள டெமிட்ரியஸ், எங்கே யிருக்கின்றாய்? பேசு.

பக்.—அடே துஷ்டா, உருவின கத்தியுங் கையுமாய் இதோ இருக்கிறேன். நீ எங்கே இருக்கிறாய்?

லைஸாண்டர்.—இதோ நேரே உன்னிடத்து வருகிறேன்.

பக்.—அப்படியானால் என்பின் ஓடிவா; செடிகளில்லா வெளியான இடத்துக்குப் போவோம். (லைசாண்டர் கேட்குங்குரலைத் தொடர்ந்து போதல்.)

[டெமிட்ரியஸ் பின்னும் வருதல்.]

டெமிட்ரியஸ்.—லைஸாண்டர், ஏ, ஏ, ஓட்டம் பிடிப்பவனே, ஆண்மை யற்றவனே, ஓடிப் போனாயோ? நிற்பாயானாற் பேசு.

பக்.—ஏ, ஏ, பயங்கொள்ளி, நட்சத்திரங்களிடத்து உன் வீரவாது கூறுகிறாயோ? சண்டைக்குச் சந்நத்தமா யிருப்பதாகச் செடிகளுக்குச் சொல்லுகிறாயோ? வெளியிற் புறப்படாய் போலும். வீரமற்றவனே, வெளியில் வா. அடேகுழந்தாய், வா. உன்னைப் பிரம்பாலடித்துச் சிக்ஷிப்பேன்; குழந்தைபோன்ற உன்மேற் கத்தியெடுப்பது தருமமன்று.

டெமிட்ரியஸ்.—எங்கே நிற்கிறாயோ?

பக்.—என் குரலைத்தொடர்ந்து வா; நாம் இங்குச்செய்வது வீரபரிக்ஷையன்று. (பக்கும் டெமிட்ரியஸ்ஸும் போதல்.)

[லைஸாண்டர் மறுபடியும் வருதல்.]

லைஸாண்டர்.—அவன் என்முன்னிற் போய்க்கொண்டே யிருக்கிறான்; என்னோடு வீரவாதும் பேசுகிறான். கூப்பிடுமிடத்திற் சென்றால், அவ்விடம்விட்டு அகல்கிறான். அந்தத்துஷ்டன் என்னிலும் கால்வேக முள்ளவன். நான் துரிதமாய்ப் போகப்போக அவன் என்னிலும் துரிதமாய்ப் பறக்கிறான். இவ்விருட்டில் மேடு பள்ளத்தி லகப்பட்டு மிக வருந்தினேன். நான் இங்கிருந்து சற்று இளைப்பாறுவேன். (படுத்துக்கொண்டு) ஓ! நற்பகலே, நீவிரைவில்வந்து நிலந்தெளிய ஒளிவீசத்தொடங்கும்பொழுது நான் டெமிட்ரியஸ்ஸைக்கண்டு இப்பழிக்குத் தக்க பிரதி செய்வேன். (உறங்குதல்.)

[பக்கும் டெமிட்ரியஸ்ஸூம் மறுபடியும் வருதல்.]

பக்.—ஓ! ஓ! பயங்கொள்ளி! ஏன் வாராமற் பின்வாங்குகிருய்?

டெமிட்ரியஸ்.—தைரிய முண்டானல் நான் வருமளவும் மில். நான் தொடர்ந்து வரவர நீ எதையும் தாண்டி ஓடிக்கொண்டே யிருக்கிருய்; நிற்கத் துணியாய்; என் முகத்தைப்பார்க்கத் தைரியமில்லாய். இப்பொழுது எங்கேயிருக்கின்ருய்?

பக்.—இதோ இருக்கிறேன்;

டெமிட்ரியஸ்.—என்னைப் பரிகாசம் செய்கின்ருய்; நன்று; நீ இப்பொழுது போ. விடிந்தபின் நான் உனக்கு இதற்குத் தக்க வழி செய்வேன். களைப்பால் இங்குச் சற்றுக் கால் நீட்டிப்படுத்து உறங்குவேன். (படுத்து உறங்குதல்.)

[ஹெலனு மறுபடியும் வருதல்.]

ஹெலன.—ஓ! செல்லா இரவே! சிறுகா இருளே! கீழ்த்திசையினின்றும் என் ஆறுதலாகிய ஒளி விரைவில் வாராதோ? நான் இவ்வெறுக்குங் கூட்டத்தினின்றும் எனதூருக்குத் திரும்பிப் போகேனே? துக்கந்தணிக்கும் உறக்கமே, என்னைச்சற்று மெய்ம்மறந்திருக்கச் செய்வாயாக. (படுத்து உறங்குதல்.)

பக்.—மூவர் வந்தார்கள். இன்னும் ஒருவர் வரவேண்டும். அப்பொழுது நால்வருஞ் சேர்ந்து இரண்டு தம்பதிகளாவார்கள். துயரமுகத்தினளாய் இதோ அவள் வருகிருள். காமன் மிகத்துஷ்டன்; பெண்பாலோரை இவ்வாறு வருத்துகின்ருனே!

[ஹெர்ம்யா பின்னும் வருதல்.]

ஹெர்ம்யா.—இதுவரையிலும் இவ்வளவு தளர்ச்சியில்லை; இத்தனை துயரமில்லை. பனியால் நனைந்து முள்ளாற்கீறுண்டு எடுத்தடிவைக்க வன்மையற்றவளாயினேன். இரண்டு காலும் விழுந்து போகின்றன; விடியுமளவும் இங்கிருந்து இளைப்பாறுவேன். தெய்வமே, அவருக்குள் போரெனின், லைஸாண்டரைக் காப்பாற்று. (படுத்து உறங்குதல்.)

பக்.—இத்தரையில் அயர்ந்து உறங்கு; நற்காதலனே, உன்கண்ணில் இம் மாற்று ரசத்தைப் பிழிவேன். (லைஸாண்டர் கண்ணில் இரசத்தைப் பிழிதல்.) நீ விழித்து உன் முந்தின காதலியின் கண்ணைக்கண்டு களிப்புறுவாயாக. இதனல் அவனவனுக்குள்ளது குறையாது என்பதும், சாத்தன் சாத்தியை அடைவான் என்பதும், ஒன்றும் தப்பாது என்பதும், எல்லாம் நன்முடிவைப் பெறும் என்பதும் உலகிற்கு நன்கு விளங்குவனவாக.

(மூன்ரும் அங்கம் முற்றிற்று.)

எஸ். நாராயணசாமி அய்யர், பி. ஏ.

---

## சுவாமிநாததேசிகர் அவர்பிரபந்தங்கள்.

1. சுவாமிநாததேசிகர் என்னும் நாமதேயத்தையுடைய இம்மகா பண்டிதர் பாண்டிவள நாட்டிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். இவர் கல்விக் களஞ்சியமாகவும், கருணை முதலிய சற்குணங்களுக்கு [1]ஆகரமாகவும் விளங்கியவர். இவர், "விவேகசிந்தாமணி," 8-வது சஞ்சிகையில், மயிலேறும்பெருமாள்பிள்ளை யினுடைய மாணுக்கரென்று காட்டியிருக்கிறோம்.

2. இவருடைய மதமோ சைவமதம். இவர் பரம்பரைச் சித்தாந்த சைவர் மரபினர். இவர் இளமைப் பருவத்திலேயே துறவறப் பிரீதியுடையவராதலின், திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தைச் சார்ந்து, அப்பொழுது அவ்வாதீனத்தில் ஞானதேசிகராக வீற்றிருந்த ஸ்ரீமத் அம்பலவாண தேசிகரிடம் சிவதீக்ஷைபெற்று விளங்கியவர். இஃது, இலக்கணக்கொத்துப் பாயிரத்துள், "தீக்ஷா குருவணக்கம்" எனத் [2]தலைச்சாத்திட்டு, 3-வது விதியாக,

"ஊரும் பேரு முருவு மில்லா
ஞானநூர் திருவா வடுதுறை யூரனை
தம்பல வாண னெனும்பெய ராதரித்
தறிவே யுருவா யமர்ந்தகுரு ராயனைப்
பொறையுடல்போகப்புகழ்ந்தடிபோற்றுவாம்"

என்று கூறப்பட்டிருப்பதினலே நன்கு விளங்கும். மேலு மிவ்வாசிரியர் ஆண்டு அவ்வாதீனத்தில் ஞானதேசிகர்பால் அருட்பணி புரிந்துகொண்டு அணுக்கத் தொண்டராய்ச் சின்னள் அமர்ந்திருந்தனர். இக்காலத்திற்ருன் நமது தேசிகர் தமிழ் கற்குமாறு பன்னிரியாண்டு மயிலேறும் பெருமாள்பிள்ளை பாற்சென்றது. நந்

---

[1] ஆகரம்=இருப்பிடம். [2] தலைச்சாத்து=Heading.

தேசிகர் அவர் மாட்டுத் திராவிடம் பயின்றதோடே நின்றுவிடாமல், திருநெல்வேலிச் சில்லா இராசவல்லிபுரத்திற் கடுத்த செப்பறைப் பதிக் கநகசபாபதி சிவாசாரியா ரிடத்துக் கைர்வாண பாஷையும் பயின்றனர். இங்ஙனந் தாம் பயின்ற நன்றியறிதலை யுலகிற்குத் தெரிவிப்பானன்றே "சம்ஸ்கிருத வித்தியா குருவணக்க" மென்று தீட்டிச்

"செப்பறைப் பதியின்வாழ் சிவத்துவிசன்
கநகசபாபதி கருதுவட நூற்கடற்
றபோதநர் புகழுஞ் சைவாதிராச
னுபய பதங்களை யுண்மையொடு பணிவாம்"

என்று கூறியதூஉ மென்க. இவர் தம்பின்னாட்களில் "ஈசானதேசிகர்" என்னுந் "தீட்சாநாமப் பூட்சியிற் பொலிந்து" திருநெல்வேலியில் ஆதீனத்தைச் சார்ந்த ஈசாந மடாலயத்தில் இருந்தருளினர்.

3. இவர் இருந்தகாலம் முற் சஞ்சிகைகளிற் கூறியாங்கு 18-ம் நூற்றாண்டின் தொடக்கமேயாம். இதைப்பற்றிச் சென்ற மூன்றுசஞ்சிகைகளிலும் வரைந்து சுட்டிப்போந்தாம். ஆதலின் இவ்விஷயத்தைக் குறித்து விரித்துரையாது விடுக்கின்றோம், "கூறியது கூறல்" என்னுங் குற்றத்தினின்றுந் தவிர்தற் பொருட்டு. இவர் வெகுகாலம் ஜீவித்திருந்ததாகக் கேள்விப்படுகிறோம்.

4. இப்புலவர் புங்கவர் செய்த பிரபந்தங்கள் "இலக்கணக்கொத்துரை" என்பதும் "தசகாரியம்" என்பதுமாம். இவ்விருநூலையு மிவரியற்றினரென்பதைப்பற்றி ஐயங்கொள்ளக் கிடத்தற்கு இடனில்லை; ஆகவே யினி யப்பிரபந்தங்களின் குணகுணங்களைப்பற்றி யுபந்நியசிப்பாம்.

5. முதலாவதாகிய "இலக்கணக்கொத்துரை" என்னும் பிரபந்தமானது ஒருவியாகரண சாஸ்திரம். இஃது பாயிரமுள்பட, வேற்றுமையியல், வினையியல், ஒழிபியல் என நான்கியல்களையுடையது. ஆகவே யிது தமிழிலக்கணத்தின் ஒரு பகுதியும், அதிக முக்கியமானதுமாகிய சொல்லதிகாரத்தின்பாற் படுகின்றது. இதில் 131 சூத்திரங்களுள. இவற்றுள் ஒவ்வொரு விதியும் அருமையான வியாகரணரகசியங்களை விளக்கிக் காட்டுகின்றது. இவர் தாங் கற்ற இலக்கண இலக்கியங்களில் இலை மறைகாய் போல் மறைந்து கிடந்த அரிய உண்மைகளையெல்லாந் தமது நுட்ப புத்தியினா லாராய்ந்து கூறியிருக்கின்றனர். சூத்திரங்களெல்லாம் வெகு சேர்த்தியாய் அமைந்திருக்கின்றன. இவர் "பலர் நூல்களினும் பலருரைகளினுஞ் சிதறிக் கிடந்த சில விதிகளை ஒவ்வொரு சூத்திரத்தால் ஒருங்கே" யாவரும் அறியும்படி செய்திருத்தலின் இலக்கணக் கொத்தென்று பெயரிட்டதாகக் காரணங் குறிக்கின்றார். இவர் பாயிரம் ஆறாவது விதியுள்,

"என்னாலியன்றது
சிறப்பாயுள்ளன சில தேடினனவை
மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்டன
னவன்கையிலகப்படாதடங்கின வவற்றுளுஞ்
சிறிதினைச் சிறியேன் சிறிய சிறார்தமக்
குரைத்தனன்"

என்று அவையடக்கம் கூறியிருத்தலின் நயத்தை யாவரும் உணர்வர். இதில் கருவி சொல்லும் பாயிரம் 7-வது விதியுட் கூறப்பட்ட சில பாகங்களை யாழ்ப்பாணம் ம-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் மறுத்து நியாயங் காட்டி யிருக்கின்றனர். இவற்றின் தாரதம்மியங்களைப்பற்றி விவரித்தற்கு இது தக்க காலமன்றாதலின், அரைமனத்துடன் விடுகின்றோம். இவருடைய கொள்கைகளெல்லாம் பரந்த தன்மையனவாகக் காணப்படுகின்றன. இத்தன்மையானது தற்காலத் தமிழ்ப் பண்டிதர்களிடத்துக் காணப்படுத லரிது. இவருடைய பரந்த கொள்கைகட்கு உதாரணமாக ஈண்டுச் சில குறிப்பாம்.

"மாரிபோற் கொடுப்பினு மந்தனை விட்டுக்
கூரியனுடனே கொடுத்தும் பழகுக"
"முற்காலத்துப் போதகாசிரியர்
மொழிகுவர் மறைபாரருமையாம் விதிகளை
வழிவழிநின்று வழங்கற் பொருட்டே
யிக்காலத்தா ரென்பய னினைந்தோ
விசையார்தாமு மிசையார் பூமியி
லிங்ஙன மாதலி னிறக்குமென்றெண்ணி
யவைகளைத் திரட்டி யமைத்தனன்"

என்பனமுதலான கூற்றுக்கள் எல்லாம் மேற்கூறியபரந்த கொள்கைக்குத் திருஷ்டாந்தமாதல் காண்க. இனி யிவர் இவ்விலக்கணக்கொத்திற்கு உரையுந் தாமே யெழுதினர்.

இவரிங்ஙன மெழுதியதற்குக் காரணமாக வைத்தியநாதநாவலர் இலக்கண விளக்கத்திற் குறையெழுதியதையும் சுப்பிரமணிய தீட்சிதர் பிரயோக விவேகத்திற் குறை யெழுதியதையும் கூறுகின்றனர். இனி முதலாவதாகிய வேற்றுமையியலில் காரக இலக்கணத்தை விரித்துக் கூறுவான் றொடங்குகின்றார். இடையிடையே வடமொழிக் கொள்கைகளோடு பொருத்திக் காட்டுகின்றார். இனி யிரண்டாவதாகிய வினையியலில் தொல்காப்பியமாகிய பேரிலக்கணங்களிற் காணற்படும், அரிய இலக்கண நுட்பங்களையும் குறள் பரிமேலழக ருரையில் ஆங்காங்குக்கூறிக்கிடக்கின்றஅருமையான சிலவிஷயங்களையும்இவர்விதியிலேதொகுத்திருக்கின்றனர். இனி மூன்றாவதாகிய ஒழிபியலில் பிரயோக விலக்கணமும் அண்மை தகுதி அவாய்நிலை என்பன முதலான தருக்கநூல் சாம்பிரதாயங்களும் உபசர்க்கம்பிரத்தியயமாகிய இவற்றினிலக்கணங்களும்பொருள் கோளினிலக்கணங்களும் இவைபோல்வன பிறவும் விரித்துக்கூறற்பட்டிருக்கின்றன. இவர்

"இந்நூற்குதாரணந் தொன்னூற் செய்யுளுட்
சிலவேயெழுதினம் பலவேயெழுதின
முலகவழக்கினு ளுணரும்பொருட்டே"

என்று தாம் சொல்லியவண்ணம் உதாரணங்களெல்லாம் உலக வழக்கினின்றும் எடுத்துக் காட்டிச் சூத்திரங்களை நன்கு விளக்குகின்றார்.

6. இனி இரண்டாவதாகிய "தசகாரியம்" என்னும் பிரபந்தமானது ஒரு ஞானநூல்.இஃது சித்தாந்த சைவ மதசம்பந்தமான விஷயங்களை நன்கு விளக்குகின்ற தாதலின்,இதற்கு விசேஷ மகிமை யேற்பட்டுளது. இது "பண்டார சாத்திரம்" எனச் சைவர்களால் வழங்கப்பட்டு வருகின்ற பதினான்கு ஞானநூல்களிற் பதின்மூன்றாவதாகின்றது. இதில்இவ்வாசிரியர் தமது புத்தி நுட்பத்தை இனிது காட்டியிருக்கின்றார். இந்நூலானே நமது தேசிகருடைய சொல்வலிமையும் தருக்க நூற்பயிற்சியும் இனையவென்று விளங்குகின்றன.

7. இனிப் பொதுப்பட இவருடைய கண்டக சாமர்த்தியமும், வாதஞ்செய்யும் வன்மையும், இவைபோல்வன பிறவும், ஐரோப்பாக் கண்டத்திலே 12-ம் 13-ம் நூற்றாண்டுகளிலே "ஸ்கூல்மென்" (Schoolmeu) என்று பேர்பெற்றிருந்த ஓர்வித சாஸ்திரிமார்களைப்பற்றி யெமக்கு ஞாபக மூட்டுகின்றன. இதனாலே நந்தேசிகோத்தமர்க்கு விசேஷத் தாழ்வு தோனிக்க மாட்டாதென்று கொள்ளுதற்குச் சற்றும் யோசனை வேண்டுவதில்லை.

வி. கோ. சூரியநாராயணசாஸ்திரி.

---

## ஹிந்துக்களின் க்ஷயகதி.

### 2-வது அனுக க்ஷயம்.

அனுகம் என்பது முகவடிவம். ஹிந்துக்களின் முகவடிவம் நாளுக்கு நாள் க்ஷயப் பட்டு வருகிறதென்பதிற் சந்தேகமில்லை, ஆரிய வம்சத்தைச் சேர்ந்த ஹிந்துக்களின் முகவடிவம் எப்படி யென்றால் பழைய ஆலயங்களில் உபயோகித்து வரும் உற்சவ விக்கிரகங் களின் வடிவமாம். ஒவ்வொரு தேசத்திலும் ஆங்காங்குள்ள ஜனங்களின் அபிப்பிராயப்படி எந்த எந்த பாகம் இலக்ஷணமோ அந்த அந்த பாகம் அமைத்துத்தான் படங்கள், விக்கிரகங்கள் உண்டாக்குகிறது சகஜம். ஆனால் அந்த அந்தத் தேசத்தில் இயற்கையில் காணாத இலக்ஷண பாகங்களை கற்பனா சக்தியால் நிர்மித்துக்கேவலம் மானசமாக நிர்மிக்கிறவழக்கமில்லை. வாஸ்தவத்திற் காணப்படுகிற உத்தம பாகங்களை யமைத்துத் தான் விக்கிரகங்கள்நிர்மிக்கிறது. இதைத்திருஷ்டாந்தப் படுத்தவேண்டு மென்றால் அனேக பக்கங்கள் எழுதவேண்டி வரும். இக்காலத்திலும் நமது ராச்சியத்தில் நமது உற்சவ விக்கிரகங்களின் முகவடிவு பெற்றவர்கள் அபூர்வமா யிருக்கிறார்கள். அவர்கள் பெரும்பாலும் வயசு சென்ற விருத்தர்களே.

ஆரிய முகவடிவம் யாதெனில் சர்ப்பத்தின் சிரசுபோல் சிரசு உயர்ந்தெழும்பிக் கபோல விசாலமும் நேத்திர விசாலமும் பெற்று காதுகள் நேத்திர ரேகைகட்குக் கீழ்ப்பட்டு அழகான மடல்கள் பொருந்தி, கன்னத் தெலும்புகள் உள்ளடங்கி, கன்னங் குழிபடாமல் மூக்கு நிமிர்ந்து நீண்டு கூர்மை பெற்று, சரியான புடைப்புகளும் சிறு துவாரங்களும் பொருந்தி, உதடு பிஞ்சுபோற் சிறுத்து தாடை யெலும்பு

கள் அதிகம் வெளியேதள்ளி நிற்கவாவது உள்ளே பின்வாங்கி நிற்கவாவது செய்யாமல் சுகுணங்களோடு இருப்பதாம். முற்காலத்தில் எல்லோரும் இவ்வகை முகவடிவம் பெற்றிருந்தார்களென்று நாம் சொல்லவரவில்லை. அக்காலத்திலும் அவலக்ஷண மானவர்கள் இருந்தார்கள் என்று நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் காட்டுவது என்னவென்றால் நமது முன்னோர்கள் பெரும்பாலும் இலக்ஷண பாகங்கட் கடுத்திருந் திருக்க நாமும் நம்முடைய சந்ததிகளும் வரவர அப்பாகங்களினின்றும் அகன்று க்ஷயமடைகிறோ மென்பதாம். தற்காலத்தில் இருக்கும் விருத்தர்களையும் இவர்களுடைய சந்ததிகளான சிறுவர்களையும் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்தில் நான்கூறிய வண்ணம் திருஷ்டாந்தப் படும். இக்காலத்தில் ஜனிக்கும் ஆண்பிள்ளைகள் அனேகர்க்கு நெற்றி சுருங்கி சிரசிலெழும்பி நில்லாமல் புருவம் நோக்கி இறங்கி வளைந்து உள்வாங்கி கிடங்குப்பட்டு அவலக்ஷணமாகியும், சிரசு ஓங்கி உயராமல் ஒடுங்கி நசுக்குண்டு குடுக்கைத் தலைப்பட்டுத் தேரை உருஞ்சின கொதும்பை போல் கும்பிச் சுருங்கியும் மூக்கு சுருங்கி யொடுங்கி மொட்டை யாகவும் சுரைக்குடுக்கை போலவும் முகத்துக்குத் தகுந்த ஆகிருதி யில்லாமலும் உதடு பருத்து வெளியே தள்ளியும் கன்னத்தெலும்புகள் முண்டுதட்டி யெழும்பிநின்று முகம் மரத்தட்டு முகமாகவும் சதுரமுகமாகவும் விகாரப்பட்டும், காது நீண்டு தடித்து நயன ரேகைக்கு மேலெழும்பி சிரசடுத்தும் தேஜஸ் மங்கியும் புருவம் ஒன்றோடொன்று சேர்ந்து கோணிக்குறுகியும் கண்கோழிமுட்டைபுதைத்தவண்ணம் ஜீவசக்தி இல்லாமல் மக்குப் பிடித்தும் இன்னும் என்னால் வர்ணிக்க முடியாத மாதிரி பேதப்பட்டும் இருக்கிறது. அபூர்வமாய் சிலர்க்குக் கண் சீனதேசத்து ஜனங்கட் கிருக்கும் பான்மையாய் சரிவடைந்து மிருக்கிறது.

அனுக க்ஷயத்திற்கு பிரதான காரணம் புத்தி க்ஷயம். ஹிந்துக்களுக்குள் புத்தி க்ஷய முண்டாவதைப் பற்றி பிற்பாடு விஸ்தாரமாய் பிரஸ்தாபிக்கிறேன். புத்திக்குத் தகுந்தபடி முகவடிவம் ஏற்படுகிறது. புத்தியுள்ளவர்கட்கு முகலக்ஷண மிருப்பதுபோல, புத்தியில்லாதவர் கட்கிருப்பதில்லை. முகலக்ஷணம் புத்தியில்லாதவர்க்கிருந்தாலும் அது வெகு அபூர்வமாகத்தான் இருக்கும். புத்தி யில்லாதவர்கட்கு முக விரூபம் பெரும்பாலுங் காணலாம்.

ஆகாரக்குறைவாலும்முகவிரூபம்வரக்கூடும். இயற்கையில் எவ்வளவு முகலட்சணம் இருந்தாலும், தகுந்த போஷணை யில்லாவிட்டால், நிலவளமும் ஜலவளமும் இல்லா வித்துப்போல் வற்றிவரண்டு அவ்வாறு வற்றி வரள்வதில் சிலபாகங்கள் சுருங்கி நிமிர்ந்து புடைத்து முகம் விகாரப்படக்கூடும். கஷ்டம் வருவதற்கு முன்னும் வந்தபின்னும் ஒருவனைக்கண்டு கஷ்டம் வருவதற்குமுன் அவன்முகம் எவ்வளவோ நன்றாயிருந்ததென்றும் கஷ்டம்வந்தபின் அவன் முகம் என்னமோபோல் போயிற்றென்றும் ஜனங்கள் ஆச்சரியத்தோடு பேசுவதை அநேகர் கேட்டிருக்கலாம். ஹிந்துக்களுடைய வறுமையோ பழமொழியாய்ப் போய்விட்டது. நமது தேசத்தில் ஆகாரக்குறைவால் மாடுகள் அவலக்ஷணமா யிருக்கின்றன.

வறுமையிலகப்பட்டவர்கள் முகவிரூபம் அடைவதைப்பார்க்கிலும் அவர்களுடைய சந்ததிகள் நிச்சயமாக முகவிரூபம் அடைகிறார்கள். ஆகாரக்குறைவால் ஆவிகுன்றி பித்தமேறி புத்திப்பிரகாசிக்காமல் மங்கிமடிந்துபோயிருக்கும் போது அடுத்தடுத்து ஸ்திரீபுமானிருவரும் கிடக்கும் காரணம்பற்றி திடீரென்று விகாரம் எழும்பி, உள்ளம்பூரித்து மனவெழுச்சியும் ஐக்கியமும் இல்லாமல் அன்புகலவாமல் அறிவுகலவாமல் கேவலம் ஜடத்துவமாகசம்பந்தமுண்டாகி பிண்டோற்பத்தியாகும்போது அக்குழந்தை முகவிரூபம் திண்ணமாய் அடைகிறது.

போகிகட்குள் மகாயோகியாகிய திருமூலர் பின்வருகிறபடி திருமந்திரத்தில் எழுதியிருக்கிறார்.

மாதா உதரம் மலமிகின் மந்தனும்
மாதா உதரம் ஜலமிகின் மூகையாம்
மாதா உதரம் இரண்டொக்கிற் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்தகுழவிக்கே.

அதாவது மாதாவயிற்றில் மலங்கட்டாய் நிற்குங்காலத்தில் பிண்டோற்பத்தியான குழந்

தை மந்தமாயிருக்குமென்றும், ஜலம் (மூத்திரம்) கட்டி நிற்குங்காலத்திலுண்டான குழந்தை ஊமையாயிருக்குமென்றும், மலமும் ஜலமும் கட்டி நிற்குங்காலத்தில் ஜெனித்த குழந்தை குருடாகப் பிறக்குமென்றும் அர்த்தமாகிறது. இந்த பிரமாணத்தை யனுசரித்து ஹிந்துக்கட்குள் வழக்கமும் ஏற்பட்டிருக்கிறது. ருதுசாந்தி காலத்தில் மலசோதனை ஜலசோதனை செய்துவரச்சொல்லித்தான் சயனக்கிரகத்தில் பெண்ணையும் பிள்ளையையும் விடுகிறார்கள். வறுமையால் சூடேறி மலங்கட்டிப் போமென்று யாவரும் ஊகிக்கக்கூடும். அவ்வாறுள்ள ஸ்திதியில் சம்பந்தமுண்டாகி ஜெனிக்கும் குழந்தைகள் மந்தமாகும்போது அதற்குத்தகுந்த க்ஷயமான முகவடிவந்தான் அந்தக்குழந்தைக்கு வரக்கூடும். பசிபட்டினியால் சூடுண்டாகி மேகம்பிறந்து ஜலம் அதிகமாய் உண்டாகி கட்டிநிற்கக்கூடும். க்ஷீணத்தாலோ சோம்பலாலோ திடீரென்று புருஷன்காட்டும் அடங்காக் காமத்திற் கிணங்கி நிர்ப்பந்தத்திற்குள் ளகப்பட்டோ மலஜல விசர்ஜனமின்றி யுண்டாகும் சம்பந்தத்தால் ஜெனிக்கும் சந்ததிகள் தாழ்ந்த மாதிரிமுகவடிவத்தோடு கூடிப்பிறக்கு மென்பதில் சந்தேகமில்லை.

முற்காலத்தில் தகுந்த இடைவிட்டு பெரியோர்களுடைய அனுமதிப்பிரகாரம் குறிப்பிட்ட நல்ல முகூர்த்தத்தில், நல்லபுத்திரனை யடையவேண்டுமென்ற ஆக்கிரகத்தோடும் முகூர்த்தத்தின் மேலுள்ள நம்பிக்கையின் மேலும் உளம்பூரித்து உணர்வுபொங்கிமனங்கலந்து அறிவு கலந்து கருவிகரணாதிகள் கலந்து ஆரோக்கியகாலத்தில் சம்பந்தமுண்டாய் வந்ததால் ஆரிய குணங்களோடும் ஆரியசரீர லக்ஷணங்களோடும் நல்லபிரஜைகள் உண்டாகி வந்தார்கள். இவ்வழக்கம் நழுவி சம்பந்த சுவாதீனம் பெற்ற அவிவிகள் 'கண்டதுகாக்ஷி வாழ்ந்தது வாழ்க்கை', 'இன்றைக்கிருப்பார் நாளைக்குக்காணோம்' என்று அலக்ஷியமாய் நினைத்து இஷ்டமானகாலமெல்லாம் இராப்பகலென்ற பேதமின்றி விஷயமே பெரிதாக எண்ணி நடத்திவருவதால் வீரிய க்ஷயமும் ரோகமும் உண்டாகி உடல் மெலிந்து காந்தலெடுத்து ஜீர்ணசக்தி குறைந்து மந்தம்பிடித்து தாங்கெட்டு தங்களுடைய சந்ததிகளும் அனுகக்ஷய முதலிய பலவகை க்ஷயம் அடையும்படி செய்கிறார்கள். கலவிசமயமுதிக்கும் மனோபாவத்திற்குத்தகுந்தபடியும் மலஜலமுதலிய தேகஸ்திதிக்குத் தகுந்தபடியும் பிரவேசசமயத்துக்குத்தகுந்தபடியும் மௌனமாய்ப் பிரவிருத்திக்கிறதற்குத் தகுந்தபடியும் சரீராரோக்கியம் இலக்ஷணம் புத்தி குணம் முதலியவை அமைகிறதென்ற சாஸ்திரங்களை மறந்துவிஷயாதுரனாய்த்திரியும் சிலர் சிலதினத்தில் இரவுமுழுமையும் சிலதினத்தில் பகல்முழுமையும் விழித்திருந்து வேசி ஸ்திரிகளை அனுபோகிக்க வேண்டி லாகிரிபதார்த்தங்கள் சாப்பிட்டு வெறியுள்ளவராகக் கூத்தாடிமயங்கித் தயங்கி புத்திக்குத் தெளிவில்லாமல் திரிவதால் அவர் மூலம் உண்டாகும் சந்ததிகட்கு சகல க்ஷயங்களுமுண்டாகு மென்பதற்குச் சந்தேகமில்லை.

மாண்பதுவாக வளர்கின்ற வன்னியைக்
காண்பதுஆண்பெண் ணலியெனுங் கற்பனை
பூண்பது மாதாபிதா வழிபோலவே
யாம்பதிசெய்தான் அச்சோதி தன்னாணையே.

இவ்வாறு திருமூலர்கூறியிருக்கும் பிரமாண வாக்கியத்தால், மாதாபிதாக்கள் மாதிரி சிசுக்கள் ஜெனிக்கிற தென்று அர்த்த மாகிறது. இக்காலங்களில் எவ்வகை விரூபமான பெண்களையும் தனம் ஆபரணம் இவைகட் காகவும் வறுமையாலுங் கொள்கிறார்கள்; எவ்வகை விகாரமான பிள்ளைகட்கும் தனம் ஆபரணம் இவைகட் காகவும் சந்ததி முட்டாமல் வர்த்தனையாக வேண்டும் என்ற பச்சாத்தாபத்தின் மேலும் பெண்களைக் கொடுக்கிறார்கள். இதனாலும் முகவடிவு சம்மந்தமாய் க்ஷய முண்டாகிறது. வராஹ சம்ஹிதையிலும் மனுஸ்மிருதியிலும் துஷ்டசுபாவமும் பலஹீனமும் அங்கஹீனமும் அவலக்ஷணமும்பொருந்திய ஸ்திரீகளோடுசேரலாகாதென்று விலக்கி யிருக்கிறது. இதை யனுஷ்டித்தாற்றான் ஹிந்துக்களுக்குள் இப்போது அதிகப் பட்டுவரும் அனுக க்ஷய முதலிய பலவகை க்ஷயகதிகள் தடைபடக்கூடும். கேவலம் காமப் பிராந்தியால் கிழ்ஜாதி சம்பந்தத்தைத் த்விர நகையாசையாலும் அவ்வகை சம்பந்த முண்டாகிறது. மேல்ஜாதிப் பெண்

ளோடு கீழ்ஜாதி ஆண் சேர்வதால் முகவடிவம் க்ஷயப்படக் கூடும். இக்காலத்தில் கலப்பு சம்பந்த மதிகம்.

ஸ்திரீகளைச் சிறையிலிட்டபாவனையாய் நிர்ப்பந்தத்திற்குள்ளாக்கி அவர்களுக்கு கல்விப்பயிற்சியின்றி ஞானசூனியப்பவித்து சுவலக்ஷண திருஷ்டியற்று தற்காலத்தில் க்ஷேத்திரவளக் குறைவு வ்ந்திருப்பதால் முகவடிவம் க்ஷயப்பட்டு வருவதற்குக் காரணமும் வந்திருக்கிறது. மலையாளத்தில் நம்பூரிஇல்லங்களில் ஆரியமுகத்தோடும் தேஜஸோடும் கூடிய குழந்தைகள் இல்லையென்றே சொல்லிவிடலாம்.

தற்காலத்தில் பாலியவிவாகம் அதிகப்பட்டிருப்பதால், புத்திக்கு ப்ராப்தியின்றி நேரிடும் சம்பந்தமும் முகவடிவம் க்ஷயமடைவதற்குக் காரணந்தான்.

பூசாரத்தாலும் சீதோஷ்ணஸ்திதி வித்தியாசத்தாலும் மேற்கண்ட க்ஷயகதி நேரிடக்கூடும். சேலத்தில் மாடுகள் ஆகிருதிகுறைந்தும் பெரும்பாலும் சிவந்த நிறமுள்ளவையாயுமிருக்கின்றன. இம்மலையாளத்தில் மாடுகள் ஆகிருதிக்குறைந்தும் கழுதைநிறமாகவும் கறுத்தநிறமாகவும் இருக்கின்றன. நாலைந்து சந்ததிகளாக இத்தேசத்தில் குடியேறிய பரதேசத்து பிராமணர்கள் முகவடிவம் உட்பட பலவிதத்திலும் க்ஷயமடைந்திருக்கிறார்கள். அவர்களில் சிலர்க்குப் பூனைமுகம் வந்திருக்கிறது. அந்நியதேசத்து நல்ல பசுக்கள் இத்தேசத்தில் வளர்ந்தாலும் அவைகளும் சீக்கிரம் க்ஷபகதிக்கு வந்து விகாரப்பட்டுப்போகின்றன. இம்மலையாளத்தில் அநேகருடையமுகம் வட்டமாகவும் தட்டையாகவும் இருக்கிறது. அதுபோலவே இங்குள்ள ஆலயங்களிலுள்ள விக்கிரகங்களும் இருக்கின்றன. பாலக்காடு திருநெல்வேலி முதலிய ஸ்தலங்களிலிருந்து சிலகாலம் குடியேறிவந்திருக்கும் பிராமணஜாதி இங்கே க்ஷயமடைந்திருக்கும் தன்மையாக மலையாளத்திலுள்ள சூத்திரர் க்ஷயப்பட்டிருப்பதில்லை. அதற்குக் காரணம் அப்போதைக்கப்போது நூதனமாய் வியாபாரம் உத்தியோகம் இவை சம்பந்தமாய் வரும் மேல்ஜாதிக்காரருடைய சம்பந்தந்தான். வரவர அவர்கட்குள்ளும் முகவடிவு சம்பந்தமாய் க்ஷயகதி ஏற்பட்டுவருகிறது. தற்காலத்தில் மூக்கு மொட்டையாவதற்குக்காரணமும் விசேஷித்து உண்டாயிருக்கிறது. பில்லாக்கு அணிந்துகொள்வதற்கு ஸ்திரீகள் கூர்மையான மூக்கின்மேல் வெறுப்படைகிறார்கள். மூக்கு மொட்டையாயிருந்தால் பில்லாக்கணிவதற்கு சுகமென்றும் அப்போதுதான் செவ்வையாய்ப் படல் சாத்தியவண்ணம் பிரகாசிக்குமென்றும் ஸ்திரீகள் நினைக்கிறார்கள். இவ்வித அபிப்பிராயத்தால் மூக்கு வரவர மொட்டையாகிக் கொண்டு வருகிறது. இப்போதுள்ள ஸ்திரீகளில் வயசு சென்றவர்களின் மூக்கு பெரும்பாகம் அதாவது 100-க்கு 80 உயர்ந்து நீண்டு கூர்மையாயிருக்க சிறுபெண்களின் மூக்கெல்லாம் பெரும்பாகம் மழுங்கிக் குறுகி மொட்டையாயிருக்கின்றன. இதற்குக் காரணமென்ன? பில்லாக் கணிந்துகொள்வதற்கு மொட்டைமூக்கு நலமென்று நினைக்கும் சித்தவிருத்திதான் காரணமென்று நினைக்க வேண்டியிருக்கிறது. பில்லாக்கு மூக்கு ஏற்பட்டு அதிகப்பட்டால் 40-வருஷமாயிருக்கலாம். இன்னும் ஜீவனோடிருக்கப்பட்ட அநேகம் வயசு சென்ற ஸ்திரீகட்கு பில்லாக்கு மூக்கில்லை. 40-வருஷத்துக்கு முன் எந்தஸ்திரீக்கும் பில்லாக்கு மூக்கில்லை. தாசிகளைத்தவிர ஏனையோர்கள் அது அசுத்தமென்றும் அனாசாரமென்றும் அசௌக்கியமென்றும் தள்ளியிருந்தார்கள். சென்ற 40-வருஷத்திற்குள் முதலாவது ஒளிமறைவாகவும்பிற்பாடு பிரகாசமாகவும் பிராமணஸ்திரீகளும் அவர்களைப்பார்த்து சில சூத்திர ஸ்திரீகளும் பில்லாக்குமூக்குக்குத்தி பில்லாக்கணிந்து வருகிறார்கள். 40-வயசுக்கதிகப்பட்டு பில்லாக்கு மூக்கில்லாத ஸ்திரீகளின் மூக்கு நீண்டு நிமிர்ந்து கூர்மைப்பட்டிருக்க பில்லாக்கு மூக்குள்ள சிறு பெண்களின் மூக்கு மொட்டையாயிருப்பதைக் காணும்போது முன் சொன்ன வியாக்கியானம் எகதேசம் சரியாயிருக்கலாம் என்று படுகிறது. ஆனால் 40-வருஷத்திற்குள் அவயவங்களின்வடிவம் மாறக்கூடுமோ வென்றும் மூக்கின் வடிவம் ஆபரண இச்சையால் ஸ்திரீகட்கு மாறினாலும் நாசிகாபரணம் அணியாத ஆண்கட்கு அவ்வாறுமாறுவதற்குக் காரணமென்னவென்றும் கேட்கக்கூடும். இதற்கு சமாதானம்

வெகு கடினமென்று எனக்குத்தோன்றவில்லை. அமெரிக்காவில் 20-வருஷத்திற்குள்ளாகநீண்டு பின் வளைந்து சில சமயங்களில் கவர்கொண்ட கொப்புகளுடைய ஓர் ஜாதிமான் ஷி கொம்பு சுவயரக்ஷைக்குப் பூரணயோக்கியதை யுள்ளதல்லவென்று கண்டு வரைதொடுத்த நேர்நிமிர்ந்த முன்வளைந்த கொம்புகளுள்ளதாய் மாறிவிட்டதென்று டார்வின் என்ற மகா சாஸ்திரி ஒருவர் எழுதியிருக்கிறார். எப்படி மானின் கொம்பு 20-வருஷத்திற்குள் மாறிற்றோ அப்படியே நமக்குள் 40-வருஷத்திற்குள்மூக்கின்வடிவம் மாறலாம். நாசிகாபரண மில்லாத ஆண்கட்கு மூக்கு மொட்டையாக வேண்டிய காரணம் மாதாவழி ஜெனித்தலும் புத்தி க்ஷயமுதலிய காரணமும் தான். மாதாவின் சுபாவம் ஆணிற்கும் பெண்ணிற்கும் சமமாயிருக்குமென்று டார்வின்* அனேக இடங்களில் சொல்லியிருக்கிறார்.

(இன்னும்வரும்.)

எஸ். இராமஸ்வாமிஅய்யர் பி. ஏ. பி. எல்.

## புஸ்தகவாசிப்பு.

### வாசிக்கும் முறைமை.

உத்தமமான புஸ்தகங்களைத்தெரிந்துகொண்டபின் அவைகளைத் தக்க முறையாய் வாசிக்கவேண்டியது. புஸ்தகங்கள் வாசிப்போரின் நோக்கத்துக்குத் தக்கதாய் இருக்கவேண்டியது. பொழுது போக்குக்காகவும் குற்றம்காண்பதற்காகவும் வாசிக்கிறவர்களுண்டு. இவைகள் தகாத நோக்கங்கள். கடவுள் நமக்கு அளந்து கொடுத்திருக்கிறதும், நீரிற்குமிழிபோல் க்ஷணத்தில் கழிந்துபோவதுமான நமது ஜீவகாலத்தில் மனதாரப்பொழுதுபோக்கிக்கொண்டிருக்க நமக்கு சமயமேயில்லை. நூல்களின் குற்றங்களைமாத்திரம் அறிய வாசிப்பது, ஒருவன் தான் காணும் மனிதரின் நல்விசேஷங்கள் ஒன்றையும் கவனியாமல், அவர்கள் முகத்தில் தோன்றும் வடுக்கள் மாசு மறுக்களைமாத்திரம் உற்று நோக்கித் திரிவதுபோலாம். தத்துவசாஸ்திரிகளிற் சிலர் விஷ சர்ப்பங்களைப்பற்றி ஒரு காரியம் சொல்லுகிறார்கள். என்னவெனில் அவைகள் ஜலம் அருந்தவேண்டியபோது, சில தருணங்களில், ஜலத்தினருகில் செல்லுமுன் தங்கள் விஷத்தை தரையில் கக்கிவிடுமோம். கக்காவிடில் ஜலத்தோடு விஷமும் உட்சென்று அவைகளின் மரணத்துக்கு ஏதுவாகுமாம். அதுபோலவே குற்றம் காணவேண்டுமென்ற எண்ணத்தோடு மாத்திரம் வாசிப்போருக்கு அவர்கள் துர்நோக்கமே கெடுதியாக முடியும். எப்படியென்றால், நீலக்கண்ணாடி வைத்தவன் கண்ணுக்கு சகலபொருட்களும் நீலமாய் தோன்றுவதுபோல, பிழை பிடிக்கவேண்டும் என்கிற ஆசைகொண்ட மனசுக்கு வாசிக்கும் நூலின் யதார்த்த கருத்து புலப்படாமல் சரியானதும் தப்பிதமாகவே காணப்படுவது இயல்பாதலால், அந்நூலின்பிரயோஜனம் கிடைக்காமல் போகும். மேலும் ஒரு நூலின் உண்மையான தன்மையை அறிய விரும்புகிறவர்கள் அந்த நூலை முதலாவது தாங்கள்தாமே பட்சபாதமற்ற சிந்தையோடு வாசித்துப்பார்க்காமல், அதற்கு விரோதமாய் வேறு ஆட்கள் எழுதிய ஆட்சேப நூல்களை முந்திவாசித்து அவற்றால் உண்டாகிய மனவெறுப்பு அல்லது அதிர்ப்தியாகிய விஷத்தோடு, பிற்பாடு அந்தநூலை வாசிப்பது பெரிய பிசகும், அநியாயமும், அப்பிரயோஜனமுமாகும். எப்படியெனில் ஒருபுஸ்தகத்தால் வரும் குணதோஷங்கள், அதை வாசிப்போரின் மனஸ்திதிக்குத் தக்கதாகவேயிருக்கும். திருஷ்டாந்தமாக ஒரு தத்துவசாஸ்திரி குறிப்பித்திருக்கிறபடி ஒரு தோட்டத்திலுள்ள ஒரே வகையான புஷ்பங்களில் வண்ணாரப்பூச்சியானது பறந்து திரிந்தும் அத்தனை உபயோகமடைகிறதில்லை. அவைகளிலிருந்துதானே சிலந்திப் பூச்சியானது விஷத்தை சேர்த்துக்கொள்ளுகிறது. தேனீயோ மதுரமான தேனைசேகரிக்கிறது. அதுபோலவே, ஒரே புஸ்தகம் அதை வாசிக்கும் ஒருவனுக்கு ஜீவனுக்கேற்ற ஜீவ வாசனையும், இன்னொருவனுக்கு மரணத்துக்கேற்ற மரண வாசனையுமாக அவரவர் மனஸ்திதிக்கேற்க தீரலாம்.

நூல்களின் சாராம்சங்களை தக்கப்டி கிரகிக்கும்படியாகவும் முன்னோரின் சரித்திர சங்கதிகளையும், மற்றும் சாஸ்திர விஷயங்களையும் ஆசிரியர்களின் பாஷை நடையையும் அறியும்படியாகவும் வாசிப்பவர்களும் உண்டு. இவை நல்ல நோக்கங்கள் தான். சகலநோக்கங்களிலும் சத்தியத்தை அறியவும் ஞானத்தை சம்பாதிக்கவும் ஆசிப்பது நலம். இந்த நல்நோக்கங்கள் கைகூட வேண்டுமானால், வாசிப்பவர்கள் தகுந்த கிரமமாய் வாசிப்பது அவசியம். ஒருபெரிய வித்வான் சொல்லியிருக்கிறபடி, "சில புஸ்தகங்களை ருசிபார்க்க மாத்திரம் வேண்டும், சில புஸ்தகங்களை நாவின்மேல் போட்டு பல்படாமல் விழுங்கிவிட வேண்டும், சில புஸ்தங்களையோ வாயிலிட்டு நன்றாக மென்று அரைத்து இரைப்பைக்குள் இறக்கி சீரணிக்கத்தக்கது." அதின் கருத்தென்னவென்றால், சில புஸ்தகங்களின் பகுதிகளைமாத்திரம் வாசிக்க வேண்டியது. சில புஸ்தகங்களை நுட்பமான ஆராய்ச்சி யில்லாமல்மேலிட்டவாக்கில் வாசிப்பது போது

* Darwin.

ம். அறிவின் களஞ்சியமாயிருக்கும் நூல்களையோ கொஞ்சங்கொஞ்சமாய் ஆதியோடந்தமாக முழுக்கவனத்தையும் செலுத்தி வாசித் துணரவேண்டியது என்பதாம்.

புஸ்தக வாசிப்பு பிரயோஜனப்படுவதற்குப் பின் சொல்லப்படும் சில விதிகள் உதவியாயிருக்கலாம். எவையெனில்,

1. வாசிக்கிறவைகளின் கருத்து முழுதும் மனசில் ஆகத்தக்கதாக படிப்படியாகவும் நினைவுபிரியாமலும் வாசிக்கவேண்டும்.

புஸ்தகத்தை நமக்குமுன் வைத்தவுடன் நம்மை புஸ்தகத்துக்கு முன் வைக்கவேண்டும். அதாவது, நமது முழுக்கருத்தையும் அதில் செலுத்தவேண்டும். இது முக்கியம். மேலும் ஒரு புஸ்தகத்தை திறந்தவுடன் முதலாவது பொதுப்பட அதிலடங்கிய பொருளை கவனித்தறியவேண்டும். அதின் முகவுரை, பொருளட்டவணை என்பவைகளை நோக்குவதால் அது எளிதில் தெரியவரும். இப்படியாக ஆரம்பத்தில் அந்த புஸ்தகத்தின் தாற்பரியம் இன்னது, இன்ன காரியங்களை இன்ன ஒழுங்காய் சொல்லியிருக்கிறது என்பதை மனதில் ஓர் படம்போல் விபரமும் திட்டமுமாய் பதிக்கவேண்டும். அப்புறம் புஸ்தகத்தை வாசிக்கத்தொடங்கலாம். ஒவ்வொரு வாக்கியத்தையும் வாசித்தபின், இந்த வாக்கியத்தின் கருத்து என் மனதில் பதிந்ததா? இதில் சொல்லிய பொருள் சத்தியமா? முக்கியமா? ஆசிரியன் எடுத்த காரியத்துக்கு இசைவா? எக்காலத்திலும் இதுமனதில் காக்கத்தக்கதா? என்று வினவவேண்டும். இப்படியே ஒவ்வொரு பகுதியின் முடிவிலும் செய்யவேண்டும். இவ்வகையாய் ஒவ்வொரு வாக்கியத்தையும் பிரிவையும் ஆராய்ந்து அதிகாரத்தின் அல்லது படலத்தின் முடிவில் வந்தவுடன் அந்த அதிகாரத்தின் பொதுத் தாற்பரியம் முதலியவற்றை திரும்பவும் பார்வையிடவேண்டும். மேலும்,

2. இப்படி கிரமங்கிரமமாகவும், நினைவை ஊன்றியும், வாசித்துக்கொண்டுபோகவே இன்னொரு காரியம் செய்வது முக்கியம். என்னவென்றால், நாம் வாசிப்பவைகளைப்பற்றி நமது மனதில் எழும்பும் அபிப்பிராயங்களை புஸ்தக ஏட்டின் விளிம்பில் மைகொண்டோ காரீயங்கொண்டோ குறிப்பதே. கவனிக்கப்படத்தக்க வாக்கியங்களுக்கு எதிராக, "இது முக்கியமானது, இது ஆழ்ந்த கருத்து, இது ஆட்சேபிக்கத்தக்கது, இது அநுபோகத்துக்கு எதிரிடை, இது சம்பந்த பேதமானது, இது கூறியது கூறல்;" என் றிப்படிப்பட்ட குறிமானம் செய்யவேண்டும். இப்படி செய்வது அலுப்பாக முதலில் தோன்றினும் "தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும், மடங்கொன்றறிவகற்றும் கல்வி" என்றதின் படி பிற்பாடு மிகுந்த நன்மைக்கு ஏதுவாகும். ஐரோப்பிய வித்தியார்த்திகள் இப்படி செய்வது சகஜம். மேலும்,

3. வாசித்தானபின் ஓரிடத்தில் அமர்ந்து உட்கார்ந்து வாசித்தவைகளை கவனத்துடன் யோசிக்கவேண்டும்.

ஆசி! வாசி! யோசி! யோசி! விசுவாசி! என்பது புஸ்தக வாசனையைப்பற்றிய ஓர் விசேஷ சூத்திரம். இதின்படி வாஞ்சையுடன் நூல்களை வாசித்தபின் அனேக மடங்குயோசிக்கவேண்டும், யோசித்தபின் சத்தியமாக விளங்குகிறவைகளை விசுவாசித்து மனதில் காத்துக்கொள்ளவேண்டும். புஸ்தகவாசனையானது போஜன வஸ்துக்களை *சவதரித்து ஒருவன்முன் வைப்பதுபோலும், யோசனையோ அவற்றை கிரமமாய் சமையல்செய்து புசித்து பலம் அடைவதுபோலுமாம். ஒருவனுக்கு அவன் களஞ்சியம் நிறைய தானிய தவசங்கள் இருந்தாலும் அவற்றை பாகம்செய்து உண்ணுவிடில் திருப்தியும் பலமும் வராமைபோல், வாசித்தவைகளை யோசியாவிடில் ஒரு பிரயோசனமும் இராது. இது விஷயத்தில் நாம் பசுவை பின்பற்றத்தக்கது என்று நன்னூல் ஆசிரியரான பவணந்திமுனிவர் மாத்திரமல்ல, ஐரோப்பிய கல்விமான்களில் சிலரும் குறித்திருக்கிறார்கள். பசுவானது புல்லுள்ள இடத்தை கண்டால் அப்புல்லை வயிறுநிறைய மேய்ந்துபின்பு ஓரிடம்போய் அமர்ந்து நின்று அல்லது படுத்து ஆமாசயத்தில் சென்ற இரையை சிறிது சிறிதாக வாயில் வருவித்து மென்று தின்றிறக்கல்போல் புஸ்தகம் வாசிப்போரும் தங்கள் உள்ளம் நிறையவாசித்து, பின்பு ஓரிடத்தில் உட்கார்ந்து வாசித்தவைகளை கொஞ்சம் கொஞ்சமாக நினைவில்கொண்டுவந்து யோசிக்கவேண்டும்.

4. மேலும் சாயந்தரந்தோறும் அல்லது சாவகாசமான மற்றவேளைகளிலும் நாம் வாசித்தவைகளைக்குறித்து நமது இஷ்டர் ஒருவரிடத்தில் அல்லது பலரிடத்தில் சம்பாஷிப்பது மிகவும் உபயோகமாயிருக்கும். நம்மில் பலர் படித்தோரும் படிக்கிறவருமாயினும், சிநேகிதர் நம்மை சந்திக்கும் தருணங்களில், "சாத்தன் இப்படி, சடையன் இப்படி" என்று நாட்டுவளப்பம் அலப்புகிறது வழக்கம். அங்கிலேய துரை ஒருவர் தமது வாசிப்பறையின் கதவில் "இது என் வாசிப்பு அறை, இதற்குள் என் வாசிப்புக்கு துணைசெய்ய விரும்புகிறவர்களேயன்றி வேறொருவரும் பிரவேசிக்கக்கூடாது" என்று எழுதியிருந்தார். யாராவது வந்து ஊர்க்கதை கதைக்க ஆரம்பித்தால் உடனே சில அன்பான வார்த்தைகள்சொல்லி வழியனுப்பிவிடுவாராம். அதுபோல வீண் பேச்சுகளைத் தள்ளி நாம்வாசித்த விஷயங்க

* சவதரித்தல்=சம்பாதித்தல்.

ளைப்பற்றி பேசினால் அது நமக்கும் பிறருக்கும் எத்தனையோ நன்மைக்கு ஏதுவாகும்! மேலும் வாசித்தவை நமது மனதைவிட்டுப் போகாதபடி செய்யத்தக்க இன்னுமோர் வழி என்னவென்றால்,

5. நாம் வாசித்தவைகளைத்திரும்ப பார்வையிடல். இதைச் சாதாரணமாய் பழையபாடம் படித்தல் என்பார்கள். இது மிகவும் மிகவும் முக்கியம். ஐரோப்பிய வித்வ சிரோமணிகள் பலர் நாம்வாசிக்கும் சமயத்தில் நாலிலொரு பங்கை பழம்பாடம் படிக்கும் வகைக்கென்று பிரயோகிக்கவேண்டுமென்று மிகவும் வற்புறுத்தி சொல்லியிருக்கிறார்கள். தமிழ் நாட்டு வித்துவான்கள் நிதசரி காலையில் ஐந்துநாழிகை நேரம் பழையபாடம் வாசிக்கிறது வழக்கமாயிருந்தது. முற்காலத்தோரில் பலர்சிறந்த பாண்டித்தியம் உடையவரானதற்கு இதுவே காரணம், நம்மைவிட அவர்களுக்கு புஸ்தகம் குறைவு. ஆனால் அவர்களுக்கு உண்டாயிருந்த கொஞ்சமான புஸ்தகங்களை அவர்கள் தங்கள் சொந்தக்கையால் பகிர்ந்து எழுதி, ஐந்து, பத்து, பன்னிரண்டுவிசை திரும்பத்திரும்ப வாசித்துவந்தார்கள். மதுரையில் கூடியிருந்த கீர்த்திபெற்ற தமிழ் வித்வான்களின் சங்கத்தில் ஒருவருக்கு சீத்தலைச்சாத்தனார் என்று பேர், ஏனெனில் அவருக்கு ஞாபகசக்தி சொற்பமாயிருந்ததால் திரும்பத் திரும்ப வாசிப்பார். ஆகிலும் மனதில் பதியவில்லையென்று அதற்கு தண்டனையாக வாசிக்குந்தோறும் முறைக்கொரு அடி எழுத்தாணியால் சிரசில் அடித்து, தலை எப்போதும் சீவடிந்துகொண்டிருந்ததாம். அவர் திரும்பத்திரும்ப படித்ததை பின்பற்றவேண்டுமேயன்றி அவர் தலையை அடித்து வருந்தினதை வியந்து, இக்காலத்திலும் சில பிள்ளைகள் படிக்கப்படிக்க நெஞ்சில் அறைவதுபோல செய்வது யுக்தியல்ல. மேற்படி சங்கத்தில்தானே தூடவுழுந்தர் என்று இன்னொரு வித்துவான் இருந்தார், அவர் ஒரு பாட்டை திரும்பத்திரும்ப சொல்லி படிக்குமுன் ஒவ்வொரு உழுந்தாய்ப்போட்டு ஒரு குடம் நிறைத்துவிடுவாராம். ஆகிலும் விடாமுயற்சியாய் திரும்பத்திரும்ப வாசித்து கல்வியில் தேர்ந்து அரிய சாமர்த்தியம் அடைந்து கொண்டார். நாகர்கோவிலில் ஒருவர் பைபில் ஆகமத்தை முப்பத்திரண்டுதரம் வாசித்து முடித்தார். வேறுசிலர் மேற்படி ஆகமத்தை மாத்திரமல்ல, இன்னும் பல நூல்களை வருஷ[illegible]த்துக்கு ஒருமுறை வாசிப்பது வழக்கம்.

[illegible] வாசித்தது மனதில் தக்கபடி பதியுமுன்
முன[illegible]ஸ்தகம் வாசிக்க ஆரம்பித்தல் அப்பிரயோ
நூதன பு[illegible]
சனமாம்.

[illegible]ாங் கற்றன வோம்பாது மற்றும்
"வருந்தித்[illegible]கற்பான் றொடங்கல்-கருந்தனங்
பரிந்துசில [illegible]
கைத்தலத்த வுய்த்துச்சொரிந்திட்டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள் செய்திடல்"

என்றிருக்கிறது. அதாவது, தாங்கள் பிரயாசைப்பட்டு கற்றகல்வியை மனதிற்காத்துக்கொள்ளாமல் வேறு நூல்களை வருந்தி கற்கப்புகுதல் கையில் கிடைத்த பெருந்திரவியத்தை அப்பால் எறிந்துவிட்டு பின்பு வருந்தி சேறு மணல் அரித்து திரவியம் சம்பாதிக்க உன்னல்போலாம் என்பதே. மேலும்,

6. நாம் வாசித்தவைகளின் பொருட் சுருக்கத்தைவகைதொகையாய் ஒழுங்குப்படுத்தி ஒருபுஸ்தகத்தில் குறித்துவைப்பதும் மிகுந்த பிரயோசனத்துக்கு ஏதுவாயிருக்கும். நாம் வாசிக்கிறவைகளை யெல்லாம் மனதில் காத்துக்கொள்ளக்கூடாது. அவைகளனைத்தையும் எழுதிவைத்துக்கொள்வதும் அத்தனை பிரயோசனப்படாது. ஆகவே வாசித்தவற்றில் முக்கியமானவைகளை ஒரு புஸ்தகத்தில் எழுதிவைத்தால் அவசரம் நேரிடும்போது அக்குறிமானப் புஸ்தகம், ஒளிப்படமானது பிரமாண்டமான ஒரு கட்டடத்தின் சாயலை உள்ளங்கைப் பரிமாணப் படத்தில் விளக்குவதுபோல, ஒரு பெரிய புஸ்தகத்தின் உள்ளுறைப்பொருளை பத்து,பன்னிரண்டு ஏட்டில் தோற்றுவிக்கும், பிரபலஸ்தரான பல கல்விமான்கள் இப்படியே செய்திருக்கிறார்கள்.

7. மேலும் நாம் வாசிக்கிறவைகளின் பொருளை நமது சொந்தவார்த்தைகளில் ஒரு பிரபந்தம் போல எழுதுவதும் மிக்க பிரயோஜனமாகும். அது வாசித்தவைகளை மனதில் பதிக்கிறதோடுகூட நமது அபிப்பிராயங்களை வெளியிடும்திராணியை விர்த்திசெய்யவும் உதவும். இம்முறையை அனுசரிக்கிறவர்கள் திறமையுள்ள கிரந்தகர்த்தாக்களும் சாதுரியமான பிரசங்கிகளும் ஆவார்கள்.

8. கடைசியாக, நமதுவாசிப்பு சரியாய் நடந்தேறி, இகபர நன்மைகளை நமக்கு பயக்கவேண்டுமானால் சகல நன்மைகளுக்கும் காரணராயிருக்கிற சர்வஜீவதயாபரரானசாக்ஷாத் ஈஸ்வரனைநோக்கி புரியும் அபிலாசையான பிரார்த்தனையோடு நிதசரி வாசிப்பைத் தொடங்கவேண்டும்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு"

என்றபடி கடவுள் உலகத்துக்கு மாத்திரமல்ல, உலகத்தில் நாம் செய்யவேண்டிய யாவற்றிற்கும் ஆதியாயிருக்க வேண்டியதானதால், அவரை நமக்குமுன்வைத்து அவர் துணையாய் வாசித்துவரில் வாசிப்பு அனுகூலமாகவே முடியும் என்பதற்குச் சந்தேகமில்லை. இப்படிசெய்யாததினால் அல்லவோ அநேகர் எத்தனையோ அதிகமாய்வாசித்தும் உணர்ந்தும் கற்றஞானிகளாவதற்கு பதிலாகக் 'கற்றறிமூடர்' என

னும் வகுப்பாரைச் சேர்ந்தவர்களாய்ப்போகிறார்கள். மேலும் இதனால் அல்லவோ உயர்தரப்படிப்பினால் தேசமுழுதும் அவபக்தி, அகந்தை, நாஸ்திகம்முதலிய தீமைகளினால் நிரம்பி கேட்டுக்குள்ளாகத் துவக்குகிறது என்கிற கூப்பாடு இக்காலத்தில் எழும்புகிறது.

ஆனால் சிலர் ‘இந்த பிரமாணங்களின்படி யெல்லாம் வாசிக்க வெத்தனையோ காலம் பிடிக்கும்! இப்படி வாசித்தால் எத்தனையோ சில புஸ்தகங்கள் மாத்திரம் வாசிக்கலாம்’’ என்பார்கள். என்றாலும் புஸ்தகவாசிப்பினால் அறிவை சம்பாதிக்க விரும்புகிறவர்கள் இப்படியே வாசிக்கவேண்டியது. படபடப்பாய் வாசிக்கும் இருபது புஸ்கத்தால் வருகிற அறிவிலும் இந்த பிரமாணங்களின்படி ஆய்ந்து அமர்ந்து வாசிக்கிற ஒரேபுஸ்தகத்தால் அதிக அறிவு உண்டாகும். இங்கிலீஷில் ஒரு புராதன பழமொழி, “ *Beware of the man of one book, for he will prove your master.*’’—என்று சொல்கிறது. அதாவது, ஒரே புஸ்தகக்காரனைக் குறித்து எச்சரிக்கையாயிரு; ஏனெனில் அவன் உன் எஜமானாகி விடுவான், அல்லது உன்னை ஜெயித்துப்போடுவான். இன்னோர் மூதுரை, “*I never fear the master of a library.*’’—என்று சொல்கிறது. இதன்பொருள் :— ‘ஒரு புஸ்தகசாலை உடையோனுக்கு நான் ஒருக்காலும் அஞ்சுகிறதில்லை, அதாவது ஒரே புஸ்தகத்தை நன்றாய் களங்கமறத்தெளிந்து தெரிந்து வாசித்திருக்கிறவன் அதின்பொருளில்தேறினவனாயிருப்பான். ஆதலால் அவனுக்கு எதிர்நிற்கக்கூடாது’என்பதாம். ஆகையால் அறிவடைய விரும்புகிறவர்கள் மேற்குறித்தவிதிகளின்படியே வாசிக்கவேண்டும். எப்படியென்றால், அவைகளை சுருக்கிச் சொல்லி; கண்டதையெல்லாம் வாசிக்கக்கூடாது. தெரிந்து அறிவாகரமான சில புஸ்தகங்களை மாத்திரம் வாசிக்கவேண்டும். வாசிக்கையில் யோசிக்கவேண்டும். வாசித்தபின்னும் யோசிக்கவேண்டும். வாசித்தவைகள் மனதை விட்டுப்போகாதபடி, வாசிக்க வாசிக்க புஸ்தக விளிம்பில் நமது அபிப்பிராயங்களைக் குறிப்பதினாலும், பிறரோடு வாசித்தவைகளைப்பற்றி சம்பாஷிப்பதினாலும், அவைகளை அடிக்கடி ஞாபகம்செய்வதினாலும், ஓர் புஸ்தகத்தில் வாசித்த பொருளை வகைதொகையாய்க் குறித்து வைப்பதினாலும், கூடுமாகில் நமது சொந்த வார்த்தையில் பிரபந்தமாக எழுதுவதினாலும் காத்துக்கொள்ளல்வேண்டும். மேலும் நமது வாசிப்பு அனுகூலப்பட தெய்வானுக்கிரகத்துக்காக பிரார்த்தித்து வரவேண்டும். இப்படி செய்பவர்கள் கல்வியில் தேறி பிரஸ்தாபித்து உலோகோபகாரிகள் ஆவார்கள் என்பது நிச்சயம்.

வாசிக்கும் முறை இப்படியானால், தினம்தோறும், வாரம்தோறும், திரள்திரளாய் பிரசுரஞ்செய்யப்படும் வர்த்தமானக் கடுதாசிகள் முதலியவைகளை என்னசெய்ய என்று ஒருவேளை சிலர் கேட்கலாம். அறிவுத் தேர்ச்சியையே கடைப்பிடியாய் கொண்டிருக்கிறவர்கள் அவைகளை மட்டாகவே வாசிக்கவேண்டியது. அவைகள்மிகுந்த பிரயோசனமானவைகள் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆகிலும் வாலிபர் அவைகளை வாசிப்பதில் அதிகநேரம் போக்குவது மனம் ஸ்திரம் கெட்டு அறிவு சிதறுகிறதற்கு ஏதுவாய் முடியும். நூதனக் கடுதாசிகள் மிட்டாய் ஆதியான தித்திப்புப் பதார்த்தங்களுக்கு நிகராய் இருக்கிறது. மிட்டாய்களை அதிகம் உட்கொண்டால் அசீரணமும் உதரநோவும் உண்டாம். “ நுண்மை நுகரேல்’’ என்பது ஔவையார் வசனம். அதாவது, சிற்றுண்டிகளையும் அவைபோன்றவைகளையும் உண்ணுதல் நோய்க்கிடமாம்.

கடைசியாக சில உற்சாக மொழிகளைச்சொல்லுதல் பிரயோசனமா யிருக்கலாம். பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் மாணாக்கர், “எங்களுக்கு எத்தனையோ பாடங்கள்! எத்தனையோ சமையக்கிறார்? எங்களால் இப்படியெல்லாம் வாசித்துமுடியுமா? என்பார்கள். இப்படியல்லாமல் வேறுவகையாய் வாசிக்கிறதைவிட வாசியாமை நன்று. “இளமையில் கல்’ என்று ஔவையார் சொன்னதின்படி சிறுபிராயத்தில் தானேவாசிக்கத்தொடங்குவது நன்று. ஆகிலும் “செய்வினை திருந்தச்செய்’’ என்றபடி தக்கவிதம் செய்யாவிடில் பிரயோசனமில்லை. “முதற்கோணல் முற்றுங்கோணல்’’ என்ற வண்ணம் இளமையில்தானேவாசிக்கத்தக்கவைகளை வாசிக்கவேண்டிய பிரகாரம் வாசியாமல், யாதொரு ஒழுங்கின்றி மனம்போல வாசித்தால் சீவகால முழுதும் நஷ்டத்துக்கேதுவாக முடியும்.

மேலும் இத்தேசத்து வாலிபரில் பலர் பள்ளிக்கூடம் விட்டவுடனே படிப்பெல்லாம் முடிந்ததென்று எண்ணினாற்போல் ஏடுகள் புஸ்தசங்களைக்கட்டி பூச்சிகள் வாசிக்கும்படி வைத்துவிடுவது வழக்கம். ஓர் சிறந்த உபாத்தியாயரும் வித்வானுமாகிய உவைற்றௌஸ் (*Rev. Whitehouse*) போதகர் தம் மாணாக்கர் கல்விச்சாலைவிட்டுப் போகும்போது அவர்களுக்கு சொல்லிவிடும் புத்தியென்னவெனில், “வாலிபரே! உங்கள் வாசிப்பும் படிப்பும் இதோடே முடிந்ததென்று எண்ணாதிருங்கள்; பள்ளிக்கூடத்தி[illegible] சித்தவாசிப்பு கல்விக்கு வித்துமாத்திரம்; [illegible]ள்ளிக்கூடம் விட்டபின் நீங்கள் வாசிக்கும் வாசிப்பினால்தான் அந்த விதை முளைத்து வளர்ந்து பூத்து காய்க்க வேண்டும். ஆகையால் வாசிப்பை கைநெகிழாதிருங்கள்’’ என்பார். லிற்றன் பிரபு (*Lord Lytton*) என்னும் வித்வான் தாம் செய்த ஒரு உபங்கியாசத்தில் ‘நான் எதார்த்தத்தில் வாசிக்கத் தொடங்கினது

காலேஜ் விட்ட பிற்பாடுதான்'' என்று மொழிந்தார். கார்லயில் (*Carlyle*) என்னும் வித்வசிரோமணியும் அவ்விதமாகவே உரைத்திருக்கிறார். எப்படியென்றால், "சர்வகலாசாலையில் (*University*) நான் கற்றுக்கொண்டது பிரதானமாய் யாதெனில், தாபந்தத்தோடும் உண்மையோடும் புஸ்தகவாசிப்பை எக்காலத்திலும் கொண்டுநடத்தவேண்டும் என்பதுதான்'' என்றார்.

பாடசாலைவிட்டு உத்தரவாதமும் மனத்தொல்லையும் நிறைந்ததான பாரி உத்தியோகங்களில் அமர்ந்திருக்கிறவர்கள் முறையாய் வாசிக்கக்கூடுமோ? "கல்விக்கு கவ்வை களை'' ஆனால் கவ்வைக்கோ கல்வி நல்ல துணை என்கலாம். நறுமலர் வாசனையானது சலித்தமனதை சந்தோஷிப்பதுபோல, ராச்சியபார உத்தியோகங்கள் முதலிய பெருந்தொல்லைகளால் சர்வகாலமும் எண்ணமுற்றிருப்போர் மனதில் புஸ்தகவாசனை என்னும் நல்வாசனை நிதசரி கமழுமாகில் அது அவர்கள் காரியாதிகளுக்கு மிகுந்த அனுகூலமாயிருக்கும் என்பதற்கு எள்ளளவேனும் ஐயமில்லை. இதிகாச நூல்களில் இதற்கு அனந்தம் திர்ஷ்டாந்தங்கள் உண்டு. அங்கிலேய அரசரில் ஒருவரான மகா ஆல்பிரட் (*Alfred the Great*) என்பவர் அறிவீனமும் யுத்த அகோரமுமான காலத்தில் செங்கோல் ஓச்சினவராயிருந்தும், நிதசரி, எட்டுமணிநேரம் புஸ்தக வாசிப்புக்கும் செபதவத்துக்கும் என்று குறித்து பிரயோகித்துவந்தார். யூதருக்குள் சிறந்த அரசனாகிய தாவீது என்பவர் நாள்தப்பாமல் மூன்றுதரம் வாசித்து தியானித்து பாட்டிசைத்து வந்தார். இங்கிலாந்து தேசத்தில் கீர்த்திபெற்ற (*Henry the 8th*) எட்டாம் ஹென்றி அரசனுக்குப்பின் கிரீடபதியான ஆறும் எட்வார்ட் (*Edward the 6th*) என்பவருக்கு மகுடாபிஷேகம் செய்த தருணத்தில், அவரது அதிகார மகத்துவத்துக்கு சின்னமாக மூன்று கட்கங்களை அவருக்கு கொடுத்தார்கள். அவரோ திரும்பிக்கொண்டு "இன்னொரு கட்கத்தைக்கொடுக்க மறந்தீர்களே, அது எங்கே?'' என்றார். அங்கு நின்ற அமைச்சர் திகைக்க, "கடவுள் அருளிய வேதாகமமானது எந்த கட்கத்திலும் கூர்மையான கட்கம் அல்லவா! அதின் நித ஆலோசனையின்றி தீயோர் சிட்சையும் நல்லோர் ரட்சையும் அரசரால் செம்மையாய் நடவாது. ஆகையால் அதை என்முன் கொண்டுவாருங்கள். அதை தினம் வாசிப்பேன்.'' என்றார்.

சேனைவீரர் அநேகர் யுத்தகளத்துக்கு போகுமுன் புஸ்தக வாசனையால் தங்கள் மனதை ஆயத்தப்படுத்தினார்கள். புஸ்தகம் வாசித்து மனந்தெளிந்தவர்கள் அக்கினிவாதை, கப்பல்சேதம், கொள்ளைநோய், குடும்ப கஸ்திகள், மரணம் முதலிய ஆபத்தான சமயங்களில் வாசியாதவர்களைவிட தைரியமும் மன அமரிக்கையும் பொருந்தியவர்களாக காணப்பட்டிருக்கிறார்கள். ஆகையால் எவ்வகை உத்தியோகங்களையும் தொழில்களையும் செம்மையாய் நடத்துவதற்கு நிதசரி புஸ்தக வாசிப்பு அவசியம். இத்தேசத்தில் திவான் உத்தியோகம் செய்த ஒரு மகானேடும் (Dewan N. Nanoo Pillai), போதகத்தொழில் நடத்திவந்த ஒரு விருத்தாப்பிய வித்வ சிரேஷ்டரோடும் (Rev. C. Yesudian) நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அவர்களில் காணப்பட்ட அநேக நல் வழக்கங்களில் ஒன்று யாதெனில் சர்வும்வரை எக்காலத்திலும் அகராதியின் சகாயத்தோடு புஸ்தக வாசிப்பில் முயற்சித்து வந்ததுதான். மாட்சிமைதங்கிய இந்திய சக்கரவர்த்தினியாராகிய விக்டோரியா (Empress Victoria) என்னும் மாது சிரோமணி அவர்கள் நாளதுவரை புஸ்தக வாசிப்பில் மாத்திரமல்ல, புஸ்தகம் எழுதுவதிலும் முயன்றுவருகிறார்கள். அவர்களிடத்தில் "ஒருதரம் ஒரு ஆபிரிக்க பிரபு விலையுயர்ந்த வெகுமதிகளோடு தன் ஸ்தானாபதியை அனுப்பினான். ஸ்தானாபதி வந்து இங்கிலாந்துக்கு இவ்வளவு மேன்மையும் மகிமையும் உண்டானதற்கு காரணமென்னவென்று விசாரிக்க, இராணியவர்கள் தங்கள் யுத்தக்கப்பல்களின் தொகையையும், தங்கள் இராணுவத்தின் திரட்சியையும், தங்கள் தேசத்தின் அளவற்ற வர்த்தகத்தையும், ... தங்கள் கஜானாவின் திரவியக்குவியல்களையும், விலையுயர்ந்த இரத்தினங்களையும், ஆபரணங்களையும் காட்டாமல், அலங்காரமாய் கட்டியிருந்த வேதாகமப்பிரதி ஒன்றை எடுத்து அவன் கையில் கொடுத்தார்கள். பின்பு அவர்கள் அவனை நோக்கி,உன்னை அனுப்பின பிரபுவினிடத்துக்கு நீ இதைக் கொண்டுபோய் இங்கிலாந்தின் மகத்துவத்தின் ரகசியம் இதுதான் என்று சொல் என்றார்கள்.'' மேற்படி புஸ்தகத்தை நிதசரி ஒழுங்காய் வாசித்து தியானிப்பது இந்த இராஜமகிஷியின் வழக்கம்.

இன்னொருவர் சங்கதியை இங்கே சொல்லாமல் விடக்கூடாது. எதையென்றால் சிலவருஷங்களுக்குமுன்தான் நம்மெல்லாருடையவும் அதிதுக்கத்துக்கிடமாய் "நாடு நீங்கின'' தாஷ்டீகரான விசாகம் திருநாள் மகா ராஜா அவர்களை குறித்ததைத்தான். அவர்கள் இளவரசராயிருந்தபோது மாத்திரமல்ல, சிங்காசனபதியான பின்பும், புஸ்தக வாசனையையும் புஸ்தகம்எழுதலையும் அதிசய விடாமுயற்சியாய் ஒரு ராச்சியத்தின் ஜோலிகள் மத்தியில் நடத்திவந்தார்கள்.

அன்றியும் ராஜாங்கஉத்தியோகங்கள் நிருவகித்துவருவோரும்கல்வித்துறைகளில்உழைப்போரும் மாத்திரமல்ல, கொல்லர், கொத்தர், தச்சர், தட்டார், கன்னார், குலாலர், கிருஷிகர், வணிகர், வண்ணார், நெ

ய்வோர், இயந்திராப்பியாசிகள், அச்சடிப்போர் முதலிய எவ்வகை கைத்தொழில் செய்வோரும் புஸ்தக வாசிப்பில் முயற்சிக்கலாம். இவ்வகையானவர்களில் பலர் தங்கள் தொழில் தொல்லைகளினிடையில் புஸ்தக வாசனையை விடாப்பிடியாய் கையாடி தம்தம் தொழில்களிலும் பல கல்வித்துறைகளிலும் தேர்ந்து பிரபல்லியப் பேர் பெற்றதற்கு அநேக அநேகம் திர்ஷ்டாந்தங்கள் உரைக்கலாம். சமையத்தாழ்வால் ஏதுவில்லை. புஸ்தக வாசனையானது ஒருவன் எந்த வேலை செய்வோனுகிலும் அவனை அவ்வேலையில் சிறக்கச்செய்யும்.

மேலும் காலையில் எழுந்தவுடன் இன்று எதை உண்போம் என்றறியாமல் திகைக்கிற ஏழைகளும் வாசிக்கலாம். இத்தேசத்திலும் எத்தேசத்திலும் கற்ருேரில் பலர், வறிஞராயிருந்தவர். திருவள்ளுவர், ஔவையார் என்பவர்களுடைய வறுமையும், ஆகிலும் அவர்கள் அடைந்த கல்விச் சிரேஷ்டமும் சகலருக்கும் தெரிந்த விஷயமே. திருவள்ளுவர் வெகு காலமாய் நெய்தல் வேலை செய்தார். ஔவையார் சிலவேளைகளில் யாசகம் செய்து பிழைத்ததுண்டு. ஐரோப்பாவில் கல்விமான்களாய் பேரெடுத்த பலர் கொடிய தரித்திரரா யிருந்தவர்கள். ஜான்ஸன் (Johnson) என்பவர் பலமுறை போஜனமின்றி பட்டினியால் வருந்தியும் புஸ்தக வாசனையில் முயற்சித்து உலகத்துக்கு இனிய நூல்களை எழுதிவைத்தார். தமது மார்க்க கொள்கைகளால் ஐரோப்பாக்கண்டம் முழுதும் அசையும்படி செய்த 'மார்டின் லூதர்'என்பவர்,முதலில் வீடுவாசல்களில் பாடிப்பாடி யாசித்து ஜீவனம் செய்து வாசிக்கத் தொடங்கினர். ஆமும் ஆதிரியன் (Adrian) ராசன், கார்பீல்ட் ஆதிக்கன் (President Garfield) முதலிய சிலர் கொடிய தரித்திரத்தில் வாசித்து தங்கள் கல்வித் திறமையால் சிங்காசனுதிபதிகளானுர்கள். தற்காலத்தில் தென் ஆபிரிக்காவில் அற்புத யாத்திரை செய்து சிங்கங்களோடும் பொருதி உலகமெங்கும் தெரியப்பட்டிருக்கும் லிவிங்ஸ்தன் (Dr. Livingston) என்பவர் சிறுபிராயத்தில் வ்ருஷந்தோறும் ஆறுமாதம் கூலிவேலை செய்து ஆறுமாசம் வாசித்தார்.

> "கற்கை நன்றே கற்கைநன்றே
> பிச்சைபுகினும் கற்கை நன்றே"

என்பது சற்புத்தி. ஆகையால் புஸ்தக வாசிப்பைப் பற்றி மேற்கூறிய சூத்திரத்தை

ஆசி! யாசி! வாசி! யோசி! யோசி! விசுவாசி!

என்றும் சொல்லலாம்.

இப்போது இங்கிலாந்து முதலிய தேசங்களில் ஊமையர் செவிடர் மாத்திரமல்ல, குருடரும் புஸ்தகப் பிரயோகத்தில் தேறி வருகிறுர்கள்.

அத்தேசங்களில் ஸ்திரீகள் இவ்விஷயத்தில் அடைந்திருக்கும் தேர்ச்சி பெரிதாயிருக்கிறது. அதை விவரிக்க சமயமில்லை. நமது தேசத்து ஸ்திரீகளும் பாடசாலைகளில் மாத்திரமல்ல, பள்ளிக்கூடப் படிப்பு முடித்தபின் வீட்டிலும் வாசித்துவரும்படி செய்வது மிகவும் முக்கியம். சிலர் இப்போது தொடங்கியிருக்கிறுர்கள். அநேகர் அப்படிச் செய்து வரும்படி கற்ருேரான பந்துக்கள் உற்சாகப்படுத்த வேண்டியது அத்தியந்த அவசரம். நமது ஸ்திரீகள்

> "குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
> மஞ்சளழகும் அழகல்ல,—நெஞ்சத்து
> நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையால்
> கல்வியழகே யழகு"

என்பதை உணர்ந்து வாசிப்பில் ஆசைகொள்வார்களாகில், நமது குடும்பங்களிலும் தேசத்திலும் சீர்திருத்தம் எத்தனையோ வேகத்தில் தலைப்படும்!

கண்யவான்களான இஷ்டரே! இதுவரை சொல்லியதில் என் பிரதான நோக்கம் என்னவெனில் புஸ்தக வாசிப்பு என்னும் விஷயத்தில் இங்கு கூடியிருப்பவர்களில் சிலருக்காகிலும் முன்னைவிட அதிக தாற்பரியமும் ஆசையும் உண்டாகவேண்டும் என்பதே. ஸ்ரீ ஜான் ஹெர்ஷல் (Sir John Hershel) என்னும் நிபுணர் சொல்லுகிறுர். "ஆத்தும சம்பந்தமான ஆறுதல்களுக்கு அப்புறம் இவ்வுலகத்தில் சகலநிலைமையிலும் நிர்வாகத்திலும் எனக்கு ஆதரவாய் நிற்பதற்காக கடவுள்நல்கவேண்டுமென்று நான் ஜெபிக்கத்தக்க விஷயம் ஒன்றுண்டானுல், அது யாதெனில், புஸ்தக வாசிப்பின்பேரில் ஆசைதான்" என்பதே. இந்த விற்பன்னனுடைய அபிப்பிராயத்தில் நானும் சேருகிறேன். புஸ்தக வாசிப்பின்மேலுள்ள ஆசை நல்ல ஆசை. இந்த திவ்ய ஆசை நம் யாவரிடத்திலும் குன்ருதிருக்கும்படி கடவுள் கிருபை செய்வாராக!

ஆசி! வாசி! யோசி! யோசி! விசுவாசி!

> "கற்றதனுலாய பயனென் கொல் வாலறிவன்
> நற்ருடொழா அரெனின்"

> "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக"

வே. மோசேஜயர்.

—):o:(—

## ஆயுள்வேதபாஸ்கரன்.

(245 - வது பக்கத்தொடர்ச்சி.)

இராஜகிரகத்தில் குடியானவன் ஒருவன் கண்டமாலையால் வாதைப்பட்டுக்கொண் டிருந்தவன் "ஐயோ! என்னசெய்வேன். வைத்தியர்கள் எல்லாரும் என்னுடைய ரோகத்தை அசாத்திய ரோகமென்று கையை விரித்துவிட்டார்களே. இனி என்

னசெய்வது. ஆயுள்வேதபாஸ்கரனாகிய ஜீவககுமாரனைப்பற்றி எங்கும் பிரக்யாதியா யிருக்கின்றதே. அவனிடத்தில்போய் முறையிட்டுக் கொள்கிறேன். அவனுங் கையை உதறிவிட்டால் அந்தக்ஷணமே உயிரை விட்டுவிடுகிறேன்'' என்றெண்ணிக்கொண்டு ஜீவகனிடஞ் சென்றான். ஜீவகன் ''ஐயா! உன்னுடைய ரோகம் அசாத்திய ரோகமல்ல. அதற்கு மருந்து தேடிக்கிடைப்பது அசாத்தியம். நான் என்ன செய்வேன்'' என்று சொன்னான். நோயாளியும் ''இனி ஆவதென்ன. ஜீவகனும்கைவிட்டான், ஓரிடமடைந்து உயிரை மாய்த்துக்கொள்வதே'' என்றெண்ணிக்கொண்டு போகும்போது ஒரு சுடுகாட்டை அடைந்தான். அங்கே ஒரு சவம் வெந்துகொண்டிருந்தது. அப்போது கீரியொன்றும் கவுளியொன்றுமாகச் சண்டையிட்டுக்கொண்டு இரண்டும் சவம் வெந்துகொண்டிருந்த நெருப்பின்மேல் வீழ்ந்தன. இதைக்கண்ட பிணியாளன் பசி பொறுக்க முடியாதவனாய் அந்தக் கீரியையும் கவுளியையும் பிடித்துத் தின்றுவிட்டான். பின்பு அம்மயான வெளியில் உள்ள ஒரு குட்டையின் நீரை உண்டு அண்டையில் இருந்ததோர் மாட்டுத் தொழுவத்தில் இருந்துகொண்டு அங்கே கிடைத்த கஞ்சியில் புளித்த தயிரும் வெண்ணெயுஞ்சேர்த்து உண்டான். உண்டமாத்திரத்தில் வீக்கந் தணிந்து இரண்டு மூன்றுமுறை வாந்தியும் பேதியுமாகவே நோய் இலகுவாயிற்று.

இவன் செய்தி இங்ஙனமானபிற்பாடு, அரசன் மனைவி வைதேகி என்பவட்கு அடிவயிற்றில் கட்டி கண்டது. அவள் அதனை அரசனுக்குணர்த்த அவன் ஜீவகனை யழைத்து அதனை இலகுவாக்க வேண்டினான். ஜீவகனும் மாக்களி கிளறி அதன்மேல் வைதேகியை இருக்கச்செய்தான். பின் அதனையெடுத்து ஆராய்ந்து பார்க்கையில் இன்ன இடத்தில் இவ்வளவான கட்டி புறப்பட்டிருக்கிறதென அறிந்து அது பழுக்கலாவதான உபாயஞ் செய்வித்தான். கட்டியும் பழுத்தானதென்று அறிந்த பிறகு மறுபடியும் மாக்களி கிளறி அதனுள் எவர்க்குந் தோன்றாமல் ஒரு சூரியை வாட்டமாக மறைத்துவைத்து அதன்மேல் வைதேகியை இன்னபடிஉட்காரவேண்டுமென்று திட்டப்படுத்தினான். அவளும் அப்படியே உட்கார்ந்தாள். மறைத்துவைத்திருந்த சத்திராயுதம் கட்டியில் தாக்கினஉடனே, கட்டியும் அறுபட்டு விஷநீரெல்லாம் வெளிப்பட்டன. பின் இரணம் ஆறும்படியான மருந்துகளைப் போடுவித்தான். அவளும் இலகுவாகிச் சுகமடைந்தாள்.

அரசன் ஜீவகனை அழைத்து ''அப்பா ஜீவகா! கட்டி இலகுவாயிற்றா?'' என்று கேட்டான். ஜீவகன் ''இலகுவாய்விட்டது'' என்றான். அரசன் ''பெண்ணாகின்றவளுக்கு அடிவயிற்றில் கண்ட கட்டியை ஆயுத சிகிச்சை செய்வதனால், பாவம் வெட்கம் அதிகரித்தவள் அதற்கு இசைவாளா. நீ மைந்தன் முறை யாதல்பற்றி வைதேகியும் உன்னிடம் ஆயுதசிகிச்சை செய்துகொண் டிருக்கவேண்டும்'' என்றான். அதுகேட்ட ஜீவகன் ''அண்ணா! அடியேன் ஆடைகளைந்து அந்தக் கட்டியைச் சிகிச்சை செய்யவில்லை'' என்று சொன்னான். அரசன் அதிசயித்து ''மற்றெப்படிச் செய்தாய்'' என்று கேட்க, ஜீவகன் ''மாக்களியின்மேல்உட்காருவித்துப் பின்பு அதை யெடுத்துப்பார்த்து இன்னஇடத்தில் இவ்வளவான கட்டி கண்டிருக்கிறதென்று கண்டு அதற்கேற்ற சிகிச்சைகளைச் செய்வித்தேன்'' என்றான். மன்னனும் மைந்தனை இறுகத் தழுவிக்கொண்டு மந்திரிமார்களை அழைத்து ''இன்னும் ஒருமுறை இவனுக்கு ஆயுள்வேதபாஸ்கரன் எனப் பட்டஞ்சூட்டுங்கள்'' என்றான்.

அப்போது கண்டமாலையால் வாதைப்பட்டிருந்து தற்செயலான அநுகூலங்கள் நேரிட்டு இலகுவான குடியானவன் அரண்மனையை யடைந்து ''மண்டலேசுவரரே! மந்திரிமார்களே! ஓட்டைநாழிக்குப் பூண்கட்டுவதுபோல, இந்த ஜீவகனிடத்தில் என்ன திறங்கண்டீர்; மறுபடியும் ஆயுள்வேதபாஸ்கரன் என்னும் பட்டங்கட்டத் துவசங்கொண்டீர்களே. அவன் என் நோயைத் தீர்க்கவில்லையே'' என்றான். அது கேட்டிருந்த ஜீவகன் ''என்ன ஐயா! அரைத்து மீந்தது அம்மி, சிரைத்து மீந்தது குடுமி என்பது போலப் பேசுகின்றீர். உம்முடைய நோயைத்தீர்க்க என்னாலாகாது என்று சொன்னதுண்டோ? உம்முடைய நோய்க்கு வேண்டிய மருந்துகளை ஒருங்கே தேடிக்கிடைப்பது அருமை என்றுதானே சொன்னேன்'' என்றான். அதன்மேல் குடியானவன் ''ஆனால், என்னை வாதித்த வியாதிக்கு மருந்தாவதைச் சொல்லும் பார்ப்போம்'' என வேண்டினான். ஜீவகனும் சடக்கெனச் சொல்லலாயினான்:—''வளர்பிறைப் பதினான்காநாளில் அழகிய மயிர் உடையான் ஒருவன் இறக்க அவனை மயானத்தில் தீயிட்டெரிக்கும்போது, கீரியும் கவுளியும் ஒன்றோடொன்று சண்டையிட்டுக்கொண்டு அந்தத் தீயில் வீழ்ந்தால் கண்டமாலைகொண்டவன் அந்தச் சமயத்தில் அக்கீரி கவுளிகளைப் பிடித்துத் தின்னவேண்டும். உடனே அம்மயானத்தில் மழைநீரிருந்தால் அதனைக் குடிக்கவேண்டும். சற்றுநேரம் பொறுத்துக் கஞ்சியில் புளித்த தயிரும் வெண்ணெயுங்கூட்டி உண்ணவேண்டும். இத்தனையும் ஒருங்கே அமையப் பெறுவது கூடுமோ? தெய்வாநுகூலமாய் இவை யனைத்தும் ஒன்றொழியாமல் அமையப்பெற்றால் அந்நோயானது சூரியனைக்கண்ட பனிபாகும். இதற்குச் சந்

தேகமில்லை" என இதுகேட்ட குடியானவன் "ஓ! ஓ! உம்மைச் சாமானியரென்று நினைத்தேன். மூவுலகிலும் உமக்கு நிகரானவர் எங்கு கிடைப்பார்? ஆயுள்வேதத்தை அளவிட்டறிந்தவரா யிருக்கிறீர். அவ்வேதந்தானும் நீரிட்டது பிச்சையாய்க் கிடக்கின்றது. உமக்கு இவர்கள் கட்டவந்த பட்டந்தானும் உம்முடைய பெருமையைத் திட்டப்படுத்திக் காட்டாது. மறைந்துறையு மந்திர விஞ்சையொன்றும் வல்லவராயின் உம்மை முழு முதற் கடவுள் என்றே கொள்வேன்." என்றுசொல்லிக் கும்பிட்டுச் சென்றான். மந்திரிமார்களும் ஜீவகனுக்கு இரண்டாமுறை ஆயுள்வேதபாஸ்கரன் என ஊரறிய முரசறைவித்துப் பட்டங்கட்டினார்கள்.

சிலநாள் சென்றபிறகு, அரசனுக்குத் தலைமகனாகின்ற அஜாதசத்துரு என்பவன், வஞ்சகச் செய்கையுடைய தேவதத்தன் என்கின்றவனால் தூண்டப்பட்டவனாய், தன் தந்தையைக் கொலைசெய்து அரசாட்சியை வெளவிக்கொண்டான். வெளவிக் கொண்ட சிலநாளில் அவன் வயிற்றில் கட்டி கண்டது. தகப்பனைக்கொன்ற தீவினையே ஒரு உண்டையாகி அவன் வயிற்றிற் புகுந்துகொண்டு வாதிப்பதுபோல அந்தக் கட்டியானது அதிக நோவைக் கொடுத்தது. கொடுக்கவும் அஜாதசத்துருவானவன் வைத்தியர்களை அழைத்து "அந்தோ! அய்யோ! என்ன செய்வேன், இந்தக் கட்டியால் படும் வேதனை சித்திரவதை என்பதைக் காட்டில் மிகப் பெரிதா யிராநின்றது. இதற்குச் சீக்கிரமாகவே சிகிச்சை செய்யுங்கள்" எனக் கூறினான். கூறக்கேட்ட வைத்தியர்கள் "எம்பெருமான்! சூரியன்முன்பனிநிற்குமோ? ஆயுள்வேதபாஸ்கரனாகும் ஜீவககுமாரபந்தன் இங்கிருக்க எங்களை அழைப்பானேன்? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடுவதுபோ லிருக்கின்றதே." என்றுசொல்லிப் போய்விட்டார்கள்.

அஜாதசத்துரு அதன்மேல் "என்ன செய்வது. இம்மருத்துவப் பைதல்கள் இந்த ஜீவகனைக் கையைக் காட்டிவிட்டார்கள்; இவன் மருந்துகொடுக்கும் பாவனையாக என் உயிரை அருந்தி நான் வருந்தித்தேடிய அரசைக் கைக்கொள்ளவுங்கூடும். ஆயினும் நான் அறிந்தமட்டில் இவன் அப்படிச் செய்பவனல்ல. அஃதன்றியும் இவன் அரசைப்பெரிதாகக் கொள்கின்றவனல்லவே. ஆயுள்வேதந்தானே இவனுக்கு அரிய பெரிய வித்தியாவிநோதமா யிராநின்றது. இவனும் என் நோயைத் தீர்க்காது என்னைக் கொல்லுவானாயின் இவனுடைய பெருமைக்குக் குறைவு உண்டாகும். ஆகவே இவன் அந்த நினைவு கொள்ளவே கொள்ளான். குற்றமுள்ளநெஞ்சு குறுகுறுக்குமென்பதுபோல, நான் இவனிடம் சந்தேகங்கொண்டேன்." என்று நினைத்துக்கொண்டு, ஜீவகனை அழைத்தான். அழைத்து "அப்பா! தம்பி! என் வயிற்றில் கட்டி கண்டிருக்கிறது. அதனைக் கண்டித்தல்வேண்டும்" என்று வேண்டினான். ஜீவகனும் கட்டியின் தன்மையை நுணித்தறிவதுபோலச் சிந்திப்பான் :—"இந்தக் கட்டியானது சந்தோஷத்தின் மிகுதியாலாயினும் கோபத்தின் மிகுதியாலாயினும் கண்டிக்கத் தக்கது. இவனோ பஞ்சமாபாதகனாக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமான சண்டாளன்: தகப்பனைக்கொன்ற தறுகண்ணன்: இந்தப் பாபாத்துமாவைப்பிடித்தநோயைச் சந்தோஷத்தின் மிகுதியால்தீர்ப்பேனாயின் நான்இவனைக் காட்டிலும் பெரிய பாவியாவேன். ஆகையால், இவனைக்கோபத்தைப் பெருக்கியே நோயை ஒழிக்கவேண்டும்."என்றிப்படியாகச் சிந்தித்து "தமயனாரே! இந்தச் சண்டாளத்தை ஒழிக்க ஒரு வகையுண்டு. அதென்னவென்றால், உமது உயிர்ப்புதல்வனாவான் உத்ஜீபத்திரனுடைய உடலின் மாமிசத்தை உண்ணுவதற்கு உடம்படல்வேண்டும். இல்லாவிட்டால் இந்த நோயைத்தீர்க்க என்னாலாகாது" என்றான். அது கேட்ட அஜாதசத்துரு அதிக ஆவேசங்கொண்டு "நன்று நன்று. நான் என் தகப்பனைக் கொன்றேன். நீ என் மைந்தனைக் கொல்வாய்,என்னையுங்கொல்வாய், அரசையுங் கைப்பற்றிக்கொள்வாய். ஆயுள்வேதத்தின் பெருமை இதுதானோ?" என்றான். இதைக் கேட்ட ஜீவகன் "எனக்கு அரசு கைக்கொள்ளும் எண்ணஞ்சிறிதுமில்லை. அரசனாகின்றவனுக்குத்தன்னாட்டி லல்லாற் சிறப்பில்லை. ஆயுள்வேதியனுக்கு அகிலப் பிரபஞ்சத்திலும் சிறப்புண்டு. உமது நோயைத்தீர்க்க இதுவல்லாமல் மருந்தில்லை" என்றுசொல்லிச் சும்மா இருந்தான். அஜாதசத்துருவும் அதற்கிசைந்தான். இசைந்தவுடனே, ஜீவகன் உத்ஜீபத்திரனை ஆடையும் அணியும் அணிவித்துக்கொண்டுவந்து "அண்ணா! இவனை இப்போதுதானே நன்றாய்க் கண்குளிரப் பாரும். இனிமேல் பாவம் இவனைக் காணப்போவதில்லையே" என்றுசொல்லி அவனை உடன் கூட்டிக்கொண்டு போனான்.

பின்பு ஜீவகன் உத்ஜீபத்திரனை ஓரிடத்தில் மறைத்துவைத்து மயானஞ்சென்று அங்கு கிடந்த ஒரு சவத்தின் தசையைக் கொண்டுவந்து அதனோடு வாசனைத்திரவியம் பலகலந்து சமைத்துக்கொண்டுபோய் அரசன் எதிரில் வைத்தான். வைத்தவுடனே, அரசன் அதனைக் கேட்டுக் கையிலெடுத்து உண்ணத் தொடங்கினானாக, ஜீவகனும் சடக்கெனக் கையைப் பிடித்துக்கொண்டு அவன் தலையில் இடித்து "பாவி! உன் தகப்பனைக் கொன்றுவிட்டாய், இப்போது உன் அரிய பிள்ளையின் சதையை உட்கொள்ளத் துணிந்தாயே!" என்று சொன்னான். அஜாதசத்துருவும் "எட! நீதானே என் மகனைக் கொல்லவேண்

டினாய்" எனச் சீறிக்கோபத்துடன் கொதித்தெழுந்தான். எழுந்தவுடனே வயிற்றில் உள்ள கட்டியானது உடைத்துக்கொள்ள, அதினின்றும் சீயும்இரத்தமும் மேலுங்கீழுமாகப் பெருக்கெடுத்துப்புறப்பட, அதைக்கண்ட அரசன் மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டான். பிற்பாடு அவன்மேல் ஜீவகன் தண்ணீரைத் தெளித்தான். அரசனும் ஸ்மரணைதோன்றி எழுந்திருந்து நீராடி அறுவகை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட உண்டு இன்பமடைந்தான்.

அப்பால் ஜீவகன் உத்ஜீபத்திரனை அழைத்துக்கொண்டுவந்து, அரசனைப்பார்த்து "அண்ணா! உம்முடைய புத்திரனாகும் உத்ஜீபத்திரனைப் பாரும்; அடியேன் ஈ யெறும்பைத்தானும் என்னுயிர்போல் எண்ணியிருப்பவன். என் அண்ணன் மகனாகும் இவனை உயிர்க்கொலைசெய்ய உடம்படுவேனோ? உமது நோய்தீர்க்கும் பொருட்டே இந்த உபாயம் பண்ணினேன்." என்று சொன்னான். அஜாதசத்துருவும் ஆநந்தமாக்கடலில் மூழ்கிக்கழிபேருவகையெய்தித் தம்பியையுந் தநயனையுஞ் சேரத் தழுவிக்கொண்டான். பின் ஜீவகனுக்கு மூன்றாமுறையும் ஆயுள்வேதபாஸ்கரன் என்று பட்டங்கட்டப்பட்டது.

தி. செல்வகேசவராயமுதலியார்.

———:o:———

## சிறுவர்க்கான ஜாலவினோதங்கள்.

### 1. பிரதிபிம்பவினோதம்.

ஒரு காகித அட்டையில் மனிதர்கள், மிருகங்களைப்போல உருவம் வெட்டி, ஒவ்வொன்றின் பாதங்களில் மெல்லிய கம்பிகள் மாட்டி, இவைகளை ஓர் பிரகாசமான விளக்கின் எதிரில் பிடிக்க, அவைகளின் சாயல் எதிரில் விழும். அவ்விடத்தில் ஒரு விசாலமான வெள்ளைத்துணித்திரையை தொங்கவிட உருவங்சளின் நிழல்கள் நன்றாய்த்தோன்றும். மேற்படி அட்டை உருவங்களை விளக்கின் அருகில் கொண்டுபோகப் போக, திரையில் தோன்றும் நிழல்கள் வரவரப் பெரிதாகும். உருவங்களைத் திரைக்கு முன்பாகக் கொண்டு வர வர உருவம் படிப்படியே சிறிதாகும்.

மேற்கூறிய அட்டை உருவங்களை ஓரிடத்தில் அசையாமல் நிறுத்தி விளக்கைமாத்திரம் எடுத்து அசைக்க நிழல்களும் திரையில் ஓடுகிறாப்போல் தோன்றும். ஒருவிளக்கு உபயோகித்தலோடு இன்னொரு விளக்கும் உபயோகிக்க, ஒவ்வொரு அட்டை உருவத்துக்கும் இரண்டு நிழல்கள் தோன்றும். இப்படியே ஓர் போர்வீரனுடைய உருவத்தை அட்டையிலொட்டி ஓரிடத்தில் நாட்டி அநேக தீபங்களை உபயோகிக்க எண்ணிறந்த இராணுவவீரர் உருவங்கள் தோன்றும்.

இவ்வேடிக்கைகளைச் செய்யுங்கால் விளக்கிற்கு பதில் சிவப்புமத்தாப்பு உபயோகிக்கில் உருவங்களின் நிழல்கள் சாதாரணமாய் கருநிறமாய்த் தெரிவதோடு நிழற்களின் ஓரங்கள் பச்சை வருணமாய்த் தோன்றும். இவ்வண்ணமே பச்சை மத்தாப்பு நீலமத்தாப்பு இவைகளை தனித்தனியாய் உபயோகிக்க நிழலின் ஓரங்கள் சிவப்பு, மஞ்சள் இவ்வித நிறங்களாய் தனித்தனி தோன்றும். இவ்வினோதங்களைப் பரீக்ஷிக்க மத்தாப்பு அகப்படாவிடின், மேற்சொல்லிய வருணங்களில் யாதொரு நிறமுடைய கண்ணாடிகளால் முழுவதும் பதித்த பலகணியுடைய வீட்டிற்குள் செய்து பார்க்கலாம். அவ்வீட்டிலிருக்கும் வஸ்துக்களின் சாயல்கள் மேற்கூறிய விதமாகத் தோன்றும். சன்னற் கண்ணாடி மூலமாய் வரும் வெளிச்சம்தவிர யாதொரு ஒளியும் அறையில் புகவிடக்கூடாது.

### 2. மாயரூபக் காட்சிகள்.

ஒரு விசாலமான வீட்டின் ஜன்னலில் கால் அங்குலம் அளவினதான துவாரம் செய்து வீட்டிற்குள் யாதொரு ஒளியும் வராதபடி, கதவு முதலானவைகளை நன்றாய்ச் சாத்தி காரிருளாக்கி, துவாரத்தின் நேராக வீட்டிற்குள் வெண்மையானதிரையை (துணி அல்லது காகிதம்) தொங்கவிட்டு வீட்டிற்கு வெளியில் துவாரத்திற்குச் சற்று தூரத்தில் மனிதர்கள், படங்கள், மிருகங்கள் இவைகளை வெய்யில் நன்றாகப்படும்படி நிற்கவைக்க இவைகளின் உருவங்கள் வீட்டுக்குள்ளிருக்கும் திரையில் தலைகீழாகத் தோன்றும். ஆனால் அது கம்மலாயிருக்கும். மேற்படி துவாரத்தின் அகலத்தைக் குறைக்கக் குறைக்க உருவமும் தெளிவாய்த் தோன்றும். திரையும் உருவமும் தெளிவாய்த் தோன்றும்வரையும் துவாரத்திற்கருகே கொண்டுபோகவேண்டும். துவாரம் குண்டூசி அளவினதாயிருந்தால் திரையை துளைக்கு மூன்று, நாலு அங்குலதூரத்தில் கட்டவும். இப்பொழுது உருவம் மிகச் சிறிதாயும் தெளிவாயுமிருக்கும். இவ்வுருவம் துளைக்கு வெகு அருகாமையி லிருப்பதால் இசைவாய் பார்க்க முடியாதாகையால், *முட்டைகாகிதத்தில் எண்ணெயைத் தடவி இக்காகிதத்தைத் திரையாக உபயோகித்து காகிதத்தின் பின்னாலிருந்து துவாரத்தின் பக்கமாய்ப் பார்க்க உருவம் தோன்றும். முட்டை காகிதத்திற்கு பதில் சுத்த வெள்ளைக் கண்ணாடியின்மேல் பசு அல்லது எருமைப் பாலைத் தாராளமாய் ஊற்றி தூசுபடாதவிடத்தில் சாக்கிரதையாய்க் காயவைத்து பின்பு உபயோகிக்கவும். ஊசித் துவாரங்களின் மூலமாய் உருவங்கள் திரையில் அமையும் ஆதாரத்தைக்கொண்டு அநேக வர்த்தக கம்பெனியார் பூதக் கண்ணாடிக்குப் பதில் குண்டூசித் துவாரத்தை யுபயோகித்து மிகவும்சொற்பவிலைக்கு சிறு 'பொட்டகிராப்பு' (ஒளிப்படமெடுக்குங்கருவி) பெட்டிகள் செய்து விற்கிறார்கள். ஓலைப்பந்தல் மரங்கள் இவைகளின்மேல் சூரிய அல்லது சந்திர காந்தி பிரகாசிக்கும்பொழுது தரையில் வட்டம் வட்டமாக ஒளிப் புள்ளிகள் தோன்றுவதை ஒவ்வொருவரும் கவனித்திருக்கலாம். இவைகள் வானத்தில் பிரகாசிக்கும் சூரிய அல்லது சந்திரனது உருவமன்றி வேறல்ல.

துளைக்குப்பதில் பூதக்கண்ணாடியை உபயோகிக்கின் உருவங்கள் இயற்கை வருணங்கள் அமைந்து வெகுவினோதமாய்த் தோன்றும். இவ்வாறு செய்யும் விதத்தைப்பற்றிப் பின்னால் விபரமாய் எழுதப்படும்

* முட்டைகாகிதம்—Tissue paper (சிறுவர் படம்விட உபயோகிக்கும் இலேசான ஒருவித காகிதம்.)

### 3, கண்ணிற் கருகிலிருக்கும் வஸ்துவைத் தெளிவாய்ப் பார்க்கும் விதம்.

சாதாரணமாய் ஓர் வஸ்துவைக் கண்ணிற்கருகாமையில் பிடித்துப்பார்ப்போமாகில், அதுதெளிவாகத் தெரியவேமாட்டாது. ஓர் மெல்லியகாகித அட்டையில் குண்டூசியால் துளைசெய்து அத்துளைமூலமாய் ஒரு குண்டூசித்தலையைப் பார்த்தால் அத்தலையானது தெளிவாயும், பெரிதாயும், தூரத்திலிருப்பதாகவும் தோன்றும். இது மற்றெந்த வஸ்துக்களுக்கும் அப்படியே பொருந்தும்.

### 4. நிழல்களின்விந்தையான ஆரோபங்கள்.

ஓர்பெரிய அறையின்மத்தியில் ஒருபிரகாசமுள்ள விளக்கைத் தரையில்வைத்து, அதற்கு 10 - அல்லது 12 - அடிகளுக்கு அப்பால் சுமார் 12 சதுர அடியுள்ள (என்றால், 12 அடிநீளமும் 12 அடி அகலமுமுள்ள) ஒருமல்திரையைத் தொங்கவிட்டு வேடிக்கைபார்க்கவந்தவர்களை திரைக்கப்புரத்தில் உட்கார வைத்து, பிறகுதிரைக்கும் விளக்கிற்கும் மத்தியில் எவ்விடத்திலாவது ஓர்மனிதன் நின்றால் அவன் சாயல் திரையில்தோன்றும். அம்மனிதன் விளக்கின் அருகிற்போகப்போக அவன்நிழல் திரையில் வரவரப்பெரிதாகும். அவன் திரைக்குமுன்பாக வரவர அவன்சாயல் சிறிதாகும், கடைசியில் அவன் திரைக்குப்பக்கத்திலேயே நின்றால் அவன் உருவமும் சாயலும் ஒரே அளவினதாயிருக்கும். மேலும் அவன் திரையினின்று மெல்லமெல்ல விளக்குப்பக்கமாக ஏகவே உருவம் வரவரப்பெரிதாகி, அவனிருபாதமும் ஒன்றாய்ச் சேர்த்துக் கிளம்பி விளக்கைத்தாண்ட திரையில் அவன் சாயல் ஆகாயத்தில் எகிறிப்பறந்து போய்விட்டதுபோல் புலப்படும். அவன் விளக்கிற்கு அப்புறத்தினின்று திரைப்பக்கமாய் குதிக்க அவனுடைய பிரமாண்ட உருவச்சாயல் திடீலென்று தோன்றி ஆகாயத்தினின்று மிறங்குவதைப் போற்காணும். இவ்வேடிக்கையை நடித்துக்காட்டுங்கால் திரைக்கருகிலோர் மனிதனையும், தீபத்திற் கருகிலோருமனிதனையும் நிற்கவைத்துப்பார்க்க பின்கூறிய மனிதனுருவம் மேற்சொல்லியவாறு அகண்டரூபமாயும், திரைக்கருகிலிருக்கும் மனிதன் சாயலோ மற்றவன் சாயலைவிட எத்தனையோ மடங்கு குன்றியதாயும் தோன்றும். இப்பொழுது விளக்கருகினிற்பவன் வாயை ஆ என்னும் எழுத்துச்சரிப்பதுபோல் நன்றாய்த்திறந்து திரைக்கருகில் நிற்பவன் நிழலின் தலைக்கருகில் கொண்டுபோக திரைக்கப்புறத்தினின்றும் வேடிக்கை பார்ப்பவர்களுக்கு ஒருமனிதனை ஒரு இராக்ஷதன் விழுங்குவதுபோல் தோற்றப்படும். இவ்வாறே ஆங்கிலேயபாஷையில் எழுதப்பட்டிராநின்ற (Jack the Giant Killer) 'இராக்ஷதன் கொல்லி ஜாக்' என்னும் சிறுவர்க்குல்லாசமளிக்கும் ஓர் சிறுகதையையும் (Gulliver's Travels) 'கல்லிவர் யாத்திரைகள்' என்னும் மிகநகைப்பூட்டும் கதையையும் தக்கவர்களைக்கொண்டு தமிழில்மொழிபெயர்த்துக் அக்கதைகளின் வரலாறுகளைக் காண்பவர்கள் களிக்கத் திரையில் நன்றாய் நடித்துகாட்டலாம்.

### 5. நெருப்புக்கண்ணாடி.

ஒரு பூதக்கண்ணாடியை சூரியனுக்கு நேராய்அசைவறப்பிடித்துக்கொண்டு பஞ்சு அல்லது சீக்கிரத்தில் தீப்பற்றிக்கொள்ளக்கூடியஎவ்வஸ்துவையாவது மேற்படி கண்ணாடியில் பிடித்துக்கொண்டு கண்கூசும்படியான அவ்வளவு காந்தியுள்ள ஒரு ஒளிப்புள்ளி அதன்மேல் தோன்றும்வரையும், அதை கண்ணாடிக்கருகிலாவது, அதற்கு சற்றுதூரத்திலாவது கொண்டுபோய் அவ்வாறு தோன்றியபின் கண்ணாடியையும் வஸ்துவையும் அசையாது சற்றுநேரம் பிடிக்க சூரிய உஷ்ணத்தினால் சூடு கண்ணாடிமூலமாய் ஊடுருவிச் சென்று வஸ்துவில் தீமூட்டிவிடும்.

### 6. ஜாலக்கிளியும் அதின்கூண்டும்.

ஒருகாகித அட்டையை அதின்'மத்தியரேகை' அல்லது குறுக்களவு 4 அங்குலம் இருக்கும்படியாக வட்டமாகவெட்டி அதின்மத்திய ரேகையின் இரண்டு முனைகளிலும் இரண்டுஉண்டை நூற்கயிறுகளைக்கட்டி, அவ்வட்டையின் ஓர்பக்கத்தில் கிளிக்கூண்டும் மற்றோர் பக்கத்தில் கிளியுமெழுதிவிட்டு அட்டையில் கட்டியிருக்கும் இரண்டுகயிறுகளைப்பிடித்துக்கொண்டு அட்டையைத் துரிதமாகச் சுற்றினால், அட்டையின் இருபக்கத்திலும் கூண்டில் கிளிவசித்திருப்பதாகத்தோன்றும். (இன்னும்வரும்.)

மா. நடேசன்.

---

## இரண்டு நீதிகள்.

உரோமதேசத்திலே 'டொமீஷியன்' என்று ஒரு சக்கரவர்த்தி யிருந்தான். அவன் துஷ்டநிக்ரகம் சிஷ்டபரிபாலனம் பண்ணி நீதி தவறாமல் இராச்சியபாரஞ்செய்து வந்தான். வருகையில் ஒருநாள் தன்னுடைய மந்திரி பிரதானிகளோடு கொலுமண்டபத்தில் கொலுவிருக்கும்போது, ஒரு வர்த்தகன் வந்து காவல்காரனைப்பார்த்து "அப்பா! நான் சக்கரவர்த்தியைக்காணவேண்டும்." என்று சொன்னான். உடனே காவல்காரன் அந்த வியாபாரியை இட்டுக்கொண்டுபோய்ச் சக்கரவர்த்தியின் எதிரிலே விட்டான்.

அந்த வர்த்தகன் அரசனைக் கண்டமாத்திரத்தில் அடியில்விழுந்து நமஸ்காரம்பண்ணி எழுந்து நின்றான்.

அப்போது அரசன் "அப்பா! நீ என்னென்ன சாமான்களை விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறாய்? என்று கேட்டான்.

அதற்கு அந்த வணிகன் "இராஜாதிராஜனே! வேறொன்றுமில்லை. இரண்டு மூதுரைகள் எழுதிக்கொண்டுவந்திருக்கிறேன். அவை அதிகமேன்மையானவை." என்று சொன்னான்.

அரசன் "அந்த இரண்டு மூதுரைகளுக்கும் எவ்வளவு கேட்கிறாய்?" என்றான்.

"ஆயிரம் ரூபா" என்று வர்த்தகன் சொன்னான். அரசன் "மெய்தான். அவைகள் எனக்கு பயன்படாவிட்டால், நான் வீணாக திரவியநஷ்டம் அடைவேன் அல்லவா?" என்று கேட்டான்.

வர்த்தகன் "மஹாப்பிரபு! அந்த இரண்டு பழமொழிகளும் தங்களுக்கு நல்ல ஆபத்துக்காலத்தில் உதவாமற் போகுமேயானால், தங்களுடைய பணத்

தைத் திரும்பக்கொடுத்து விடுகிறேன்'' என்றுசொன்னான்.

அரசன் "நல்லது. அவைகளைச்சொல்லு கேட்கலாம்'' என்றான்.

வர்த்தகன் "மண்டலேசுவரா! கேளும் முதலாவது, 'நுண்ணிய கருமமு மெண்ணித் துணி,' என்பது. இரண்டாவது 'வழியே ஏகுக வழியே மீளுக' என்பது. இந்த இரண்டையும் அநுசரித்து வருவீர்களானால், இவைகளால் தங்களுக்கு விசேஷ நன்மை உண்டாகும்.'' என்று சொன்னான்.

அரசனும் அதே அபிப்பிராயங்கொண்டு அந்த வர்த்தகனுக்கு ஆயிரம்ரூபா கொடுத்துவிடும்படி உத்தரவுசெய்தான். முதல் மூதுரையின்மேல் அதிக பிரியங்கொண்டவனாகி, அதை கொலுமண்டபத்திலும் படுக்கையறையிலும், தான் நடமாடும் எல்லா இடங்களிலும், சுவர்களின்மேல் எழுதுவித்தான். உண்ணுங்கலங்களிலும் உடுக்கும் வஸ்திரங்களிலுங் கூட அப்படியே எழுதுவித்தான்.

இப்படியிருக்கையில் இந்த அரசன், இவன் ஆனவன் இவன் ஆகாதவன் என்று தயைதாக்ஷிணியம் பக்ஷபாதமில்லாமல் நீதிசெலுத்தி வந்தமையினாலே, இவனை எப்படியாகிலும் கொல்விக்கவேண்டுமென்று அவன்குடிகளில் சில சண்டாளர்கள் ஒன்றுகூடி இரகசியமாக ஒரு ஏற்பாடு செய்தார்கள். அரண்மனை அம்பட்டனை அழைத்து, அவனுக்கு அதிக வெகுமதிகள் செய்வதாக வாக்கிட்டு, அரசனுக்கு க்ஷவரஞ்செய்யும்போது மெதுவாய் அரசனுடைய கழுத்தை அறுத்துவிடும்படி வேண்டினார்கள். பணமென்றால் பிணமும் வாயைத்திறக்குமல்லவா? அந்த அம்பட்டனும் அப்படியே ஆகட்டும் என்றுசொல்லிப்போனான்.

மறுநாள் அரசனுக்கு மயிர்களையச்சென்ற அந்த அம்பட்டன் தண்ணீரை விரலால்தொட்டு கன்னத்திலும் மோவாய்க்கட்டையிலும் தடவிவிட்டு கத்தியை எடுத்து தோல்பட்டையில்தேய்த்து தொடையின்மேல் தட்டும்போது, அரசன் தன்மடியில் மயிர் விழாதிருக்கும்படி போட்டுக்கொண்டிருந்த குட்டையில் 'நுண்ணிய கருமமும் எண்ணித் துணி' என்று எழுதியிருந்ததைக் கண்டான். அதைக்கண்டவுடனே "ஐயோ! என்னகாரியஞ்செய்ய இசைந்தேன். நான் அவர்கள் வேண்டினபடி இந்த அரசன் கழுத்தை அறுத்துவிடுவேனாகில் என்னை அதிக அவமானத்துடன் கழுவேற்றி விடுவார்கள. பதறாத காரியம் சிதறாது என்பார்கள். எந்தக்காரியத்தையும் முன்பின் ஆலோசித்துச் செய்தல்வேண்டும்'' என்று எண்ணிக்கொண்டே மயிரை வழிக்கும்படி கத்தியை எடுத்தான். கைநடுக்கலெடுத்து கத்தி கீழே விழுந்துவிட்டது. அரசனும் அதைக்கண்டு என்ன சங்கதி என்றுகேட்டான்.

அப்போது அந்த நாவிதன் "சாமி! கோபிக்க வேண்டாம். சில சண்டாளர்கள் உங்கள் கழுத்தை அறுத்துவிடும்படி என்னைக்கூலிக்குப் பேசியனுப்பினார்கள். ஐயோ! நல்லகாலம். கடவுளுடைய கிருபையினாலே அகஸ்மாத்தாக இந்த குட்டையைக் கண்டேன். அதன்மேல் எழுதியிருப்பதைப் படித்துப் பார்த்தேன். 'நுண்ணய கருமமும் எண்ணித்துணி' என்றிருக்கவே, நான் எண்ணிவந்தபடியே செய்துவிட்டால் என்கெதி என்னவாகும் என்று நினைக்க, என்மனதில் அச்சங்கொண்டேன். அதனால் கைநடுக்கலெடுத்து கத்தி கீழேவிழுந்துவிட்டது, எம்பெருமானே! அடியேனை க்ஷமித்தருளவேண்டும்'' என்று சொன்னான்.

இப்படியாக அந்த அம்பட்டன் சொன்னதையெல்லாங்கேட்ட இராசன் "ஆஹா! இந்தமுதல் மூதுரை யல்லவா என்னுடைய பிராணனைக் காத்தது. நல்லவேளையில் அதை வாங்கினேன்'' என்று சந்தோஷித்து, அம்பட்டனைப்பார்த்து "அடா! முட்டாள்பைதலே! இனி இப்படிப்பட்ட காரியத்தில் பிரவேசிக்க வேண்டாம். பத்திரம்! இந்தவேளை உன்னை மன்னிக்கிறேன்'' என்றான்.

அரசனைக்கொல்ல வழிதேடின அந்த சண்டாளர்கள் இந்த உபாயம் இப்படி வீணாய்ப்போகவே, இனி வேறென்ன செய்யலாமென்று ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

அப்போது அவர்களில் ஒருவன் அரசன் இன்ன நாளில் இன்ன ஊருக்குப்போக இருக்கிறானாம். அந்த ஊருக்குப்போகின்றவழி அதிக சுற்றாயிருப்பதால் பெரும்பான்மையாய் கிளைவழியாகப் போவானென்று எண்ணுகிறேன், அப்படிபோகும்போது நாம் அந்தக் கிளைவழியில்பதிவிருந்து அவனைக்கொல்லலாம்'' என்றுசொல்ல, எல்லாரும் சரிதான் என்று ஒப்புக்கொண்டார்கள்.

அவர்கள் எதிர்பார்த்தது போலவே அரசன், அந்த ஊருக்குப் போவதற்காகப் புறப்பட்டான். புறப்பட்டுக்கொஞ்சதூரம் போனவுடனே சேனாதிபதிகளெல்லாம் "ஐயா, இந்தவழி அதிகசுற்றானது. இதோ தெரிகின்ற இந்தக்கிளைவழியே போவோமானால் இலேசாய் வெகுசீக்கிரத்தில் போய்ச்சேரலாம்'' என்றுசொன்னார்கள்.

அரசன் அதைப்பற்றிச் சிந்தித்து "அப்பா! சேனாதிபதிகளே! "வளையவளையப் போனாலும் வழியேபோகவேண்டும்.'' அந்த வர்த்தகனும் 'வழியே ஏகுக வழியே மீளுக' என்று மூதுரை சொன்னானே. அப்பப்ப! நான் இந்தக் கிளைவழியாக வரவேமாட்டேன்,'' என்றுகூறிப் பின்பு சேனைகளைப் பார்த்து'' நேராய்ப்போகின்ற இந்த பெரிய பாதைக்காகத்தான் நான் வருவேன். நீங்கள், வேண்டுமானால் இந்தக்கிளைவழியாக பத்திரமாய் வந்துசேருங்கள்'' என்றுசொன்னான். அப்படியே சேனாவீரர்களில் சிலர் அந்தக் கிளைவழி செல்ல அரசனைக் கொல்லவேண்டி அந்தவழியிலே பதிவிருந்த அந்த சண்டாளர்கள், சேனாவீரர்கள் வருகிறதைக்கண்டு அரசனும் அவர்கள் இடையிலே இருப்பானென்று எண்ணி அவர்களில் அநேகரைக் கத்திக்கு இரையாக்கினார்கள்.

அரசன் இந்த சங்கதியைக் கேள்விப்பட்டு சேனாவீரர்கள் சேதத்தைக்குறித்து ஒருபக்கம் துக்கமும் தான் வர்த்தகன் சொன்ன இரண்டாவது மூதுரையினாலே உயிர்தப்பிப் பிழைத்ததற்காக ஒருபக்கம் சந்தோஷமும் அடைந்தான்.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

### துட்டியண்ணா கடிதம்.

என் அன்புள்ள தோழர்களே, தோழிகளே,

சென்றமுறை நான் சென்னையை விட்டுப் புறப்படுவதற்கு முன் உங்களிடம்வந்து சொல்லிக்கொண்டு உங்கள் க்ஷேமத்தையும் விசாரித்துவிட்டுப் பிரயாணப் படுந்தருணத்தில் அப்பொழுது நடந்தபரீக்ஷைகளைப் பற்றிய சிலஊமூல்களை எடுத்துரைத்து வந்தேனல்லவோ. இங்குவந்தவிடத்தில் எதிர்பாராத சில அசந்தர்ப்பங்களால், பித்தம்தலைக்கேறிச் சித்தம்பிரமித்தவர்போல தத்தகபித்த வென்று என் மனம் மெத்தக்கலக்கமுற்று செய்வதும் தவிர்வது தெரியாமல் திகைத்துநிற்கிற சமயம்இது. இந்தவேளையில் என் அறிவுக்கு எதிர்ப்பட்ட சங்கதிகளையும் எனக்குள்ள குறைவுகளையும், என் சுகதுக்கங்களை உங்களதாக நினைத்து என்னிடத்துமிக்க அன்பும் ஆதரவும் பாராட்டிவரும் என் அருமைநண்பர்களாகிய உங்களோடு சொல்லாமல் ஆரோடுசொல்லி ஆறுதல் அடைவேன். "அபத்தப் பஞ்சாங்கத்துக்கு அறுபது நாழிகையும் தியாஜ்யந்தான்" என்றபடி மனுஷனாய்ப் பிறந்தவனுக்கு எப்போதும் துக்கமில்லாமல் சுகமேது? சிலவேளைகளில் சுகம்போலக் காணப்படுவதெல்லாம் நிரூபித்துக் பார்த்தால் துக்கமானவையே யன்றி வாஸ்தவத்தில் சுகமாவதில்லை. இப்படி ஒருவனுக்கு உண்டாகும் குறைகளை ஆப்தர்களோடு சொல்லாமலிருக்க உள்ளமும் கேட்கவில்லை, உடம்புக்கும் சரிப்படவில்லை. இப்படித்தான்முன்னொரு அம்பட்டன் தனக்குள் இருந்த சங்கதியை பிறரோடு சொல்லாமல் வயிறுவீங்கி வருத்தப்பட்டானாம். அதைச் சொல்லுகிறேன், சற்றுக் கேளுங்கள்; இப்படி என் கிட்ட வாருங்கள்.

ஒரு பட்டணத்தில் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு காது இரண்டும் கழுதைக் காது. அதை வெளியில்காட்ட மிகவும் வெட்கப்பட்டு எப்போதும் காதை மறைத்துத் தலைப்பாகை கட்டிக் கொண்டே யிருந்தான். அவனுக்கு க்ஷவரம் செய்வித்துகொள்ள வேண்டிய நாள் வந்தது. அப்பொழுது அவன் க்ஷவரகனைத் தனியே அழைத்து அவனுக்கு வேண்டிய பொருளைக் கொடுத்து, தன்னுடைய காது இரண்டும் கழுதைக் காதுகள் என்பதை ஒருவரோடும் சொல்லாமலிருக்கும்படி வேண்டிக் கொண்டான் அப்படியே அம்மயிர் வினைஞனும்* ஒத்துக்கொண்டு க்ஷவரம் செய்துவிட்டுப் போய்விட்டான். போனவன் இந்த அதிசயத்தை வெகுநாள் ஒருவரோடும் சொல்லாமல் அடக்கியே வந்தான். என்ன அடக்கியும் அவன்மனம் தாளவில்லை. அதனால் நாளுக்குநாள் வயிறு உப்பி (பெருத்து), மூச்சுத் திணறுகிறது. இன்னமும் வெளியில் சொல்லாமலிருந்தால் வயிறுவெடித்துப் பிராணன் போய்விடும் போலிருக்கிறது. என்ன செய்வன் பாவம்; உடனே தன் பெண்டாட்டியைக் கூவி, அடி, அடி! என்மனதில் ஒரு இரகஸியம் இருக்கிறது. அதை இன்னொருவரோடு சொன்னால் பெரிய இடத்துச் சங்கதி யாகையால் தலை போய்விடும். சொல்லாமல் இருப்போம் என்றாலோ வயிறுவெடித்துச் செத்துப் போகிற வழியாயிருக்கிறது. என்ன செய்வேன்? இதற்கு ஏதாவது உபாயம் சொல்ல மாட்டாயா! என்று இரங்கினான், அதைக்கேட்டு அவன் மனையாள், ஐயோபாவமே! இதென்ன தொல்லை? என்று நினைத்து, புருஷனைப் பார்த்து, "நல்லது, இதோ அருகிலிருக்கும் காட்டில் போய் ஒருவரும் இல்லாத விடத்தில் நின்று உமக்கு எத்தனைதரம் சொல்ல வேணுமோ அத்தனைதரம் சொல்லிவிட்டு வந்துவிடும்" என்று தந்திரம் சொல்லிக் கொடுத்தாள். இதைக் கேட்டவுடனே அவன் "நல்லவேளை, பிழைத்தேன்" என்று ஓட்டமாயோடி அக்காட்டில் உள்ள ஒரு ஆலமரத்தடியில் நின்று "ராஜாகாது கழுதைக்காது, ராஜாகாது கழுதைக்காது"

* மயிர்வினைஞன் = அம்பட்டன்.

என்று தனக்கு வயிறு வடிகிறமட்டும் உரக்கச் சொல்லிவிட்டு வந்துவிட்டான். கேட்டீர்களா? என் அன்புள்ள கூட்டாளிகளே, அவ்வம்பட்டன் அப்படிச் சொல்லியிராவிட்டால் இறந்து போயிருப்பானல்லவா. ஆகையால் மனதொத்த இஷ்டர்களோடு கண்டதைக் கேட்டதை, குறையை நிறையைச் சொல்லிக் கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது. அதிருக்கட்டும் மீதிக் கதையையும் முடித்துவிட்டு அப்பால் சங்கதி சொல்லுகிறேன்.

அப்படி அவன் காட்டில் போய்ச் சொல்லிவிட்டுவந்த சிலநாளுக்கு அப்புறம் அரண்மனையில் அடிக்கும் பேரிகை (ஓர் தோல்வாத்தியம்) கிழிந்துவிட்டபடியால், அதுகட்டுவதற்காக அரண்மனை வாத்தியக்காரன் முன்சொன்ன ஆலமரத்தின் விழுதைக்கொண்டு வந்துகட்டினான். அவ்வாத்தியத்தை யடிக்கபோது அதினின்று உண்டான சப்தம் "ராஜாகாதுகழுதைக்காது, ராஜாகாது கழுதைக்காது" என்று வெளிப்பட்டது. இதைக் கேட்டவுடன் அரசன் கோபங்கொண்டு, "நாம் இரகஸியத்தில், வேண்டிய பொருளைக் கொடுத்து வெளியில் விடாதேயென்று வேண்டிக் கொண்டும் அந்தச் சண்டாளப் பயல் தான் வெளியில் சொல்லியிருப்பதுமல்லாமல் மேளம் அடித்தும் விளம்பரப்படுத்தி விட்டானே யென்று அவனைத் தண்டித்தானும். இதிருக்கட்டும். ஒருசங்கதி சொல்லிவிட்டுச் செலவுபெற்றுக் கொள்ளுகிறேன்.

தோழர்களே, மனிதர்களுக்குள்ள மடமையை நான் என்னென்று சொல்வேன். ஒருநாள் சாயங்காலம் ஒரு சிநேகிதரோடு லோகாபிராமமாய்ப் பேசிக்கொண்டிருந்தேன். அவரோ என்னுடன் நெடுநாள் பழகி பலதடவைகளில் பொது நன்மைகளைப் பற்றி என்னிடத்தில் கேட்டுத் தெரிந்துகொண்டது மல்லாமல், அங்கங்கே நடக்கும் பொதுச் சபைகளின் விஷயமும் பத்திரிகைகளின் ஏற்பாடும் கேட்டுள்ளவர். கொஞ்சப் ஸமஸ்கிருதமும் கொஞ்சம் இங்கிலீஷும் படித்த புத்திமான்தான். நல்ல குணசாலி. பிறரிடத்து அடக்கமும் அன்பும் ஆதரவும் உடையவர். நாலுபேருக்கு அன்னமிடும்படியான நிலைமையில் இருப்பவர். உபகாரிதான். இவ்வளவிருந்தும், அவர்பத்திரிகைகளையும், பத்திரிகாசிரியர்களையும், பத்திரிகைகளைப் படிப்போரையும்பற்றித் தாமே எடுத்துப் பேசத் தொடங்கி, பத்திரிகைள் போடுவது வீண்காரியமென்றும், பத்திரிகைகளைப் பிரசித்தஞ் செய்வோர்களும் அவற்றைப் படிப்போர்களும் ஆதரிப்போர்களும் பயனற்ற வீணர்களென்றும் பேசித்துள்ளிக் குதித்து அட்டஹாஸம் செய்தவீராப்பை அப்பனே! என்னென்று எழுதுவேன்! அத்தனை பேச்சையும் கூசாமல் கேட்டுக் கொண்டு குனிந்ததலை நிமிராமல் குட்டிச் சுவர்போலக் குந்தியிருந்தேன். பின்பு அவரும் நானும் எழுந்து சந்தியாவந்தனம் முதலியவற்றைச் செய்யச்சென்றோம். அப்பால் நான் தனித்து இருக்கையில் இவருக்கு எப்பொழுது பொதுநன்மையை விசாரிக்க அறிவு உதிக்குமென்று யோசித்துக் கொண்டிருந்தேன். அப்படியிருக்கையில் விவேகசிந்தாமணியின் 8-வது ஸஞ்சிகை அவருக்கு கிடைத்தது. அது தபாலில் வந்தவுடன் முதலில் என்னிடத்தில் கொடுத்தார். தெய்வாதீனம் அவருக்கு அந்தவேளை அவகாசம் இருந்தபடியால் அவரை என்பக்கத்திலிருத்தி அச்சஞ்சிகையில் வெளிவந்த குட்டியண்ணு கடிதம் என்னும் எனது கடிதத்தையும், தூதா கடிதத்தையும், தண்ணீர் சொல்லிய தன் வரலாறு என்பதையும் மட்டும் படித்துக் காட்டினேன். அதைக்கேட்கும்போது அவருக்குண்டான ஆநந்தத்தையும், அப்பால் அவ்விஷயத்தைப்பற்றிப் பேசத் தொடங்கி அவற்றை யெழுதிய புத்திமான்களைக் கொண்டாடின கொண்டாட்டத்தையும் என்ன சொல்வேன்! என்ன சொல்வேன்!! முந்தியநாள் அவர் பத்திரிகை விஷயமாய் வெளியிட்ட விரோதமான அபிப்ராய மெல்லாம் முழுதும் அநுகூலமாய் மாறி, அவரும் எனக்கு இதற்குமுன் சாமான்ய நண்பராயிருந்தவர் இப்பொழுதுவிசேஷநண்பராகினர். இப்படிப்பட்ட பெரும்பேற்றை அவரும் நானும் அடையும்படி செய்த நமது விவேகசிந்தாமணியை முக்காலும் வந்தனஞ்செய்து, அது எக்காலும் வாழவேண்டுமென்றும், ஜனங்களுடைய அஜ்ஞானம் தாழவேண்டுமென்றும் ப்ரார்த்தித்து, இவ்

விஷயத்தை உங்களுக்குச் சொல்லலாமென்று ஓடிவந்தேன். நல்லது நேரமாகிறது, போய் வருகிறேன். இன்னும் 10 தினத்திற்குள் பட்டணத்தில் இருப்பேன்.

இப்படிக்கு
உங்கள் அன்புள்ள
குட்டியண்ணு.

## நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.

(Ghilan) கைலான் என்னும் ஊரிலே அப்துல் கடீர் என்று ஒரு துருக்கச்சிறுவன் இருந்தான். அவன் ஒருநாள் இரவில் தூங்கிக்கொண்டு இருக்கும்போது, யாரோ ஒருவர்வந்து "அப்பா! உன் தாயினிடத்தில் அநுமதி பெற்றுக்கொண்டு பாக்டாட் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திற்குப்போய் அங்கே கடவுளை தியானஞ்செய்து கொண்டிருப்பாய்" என்று சொன்னாற்போல கனவுகண்டு, காலையில் எழுந்திருந்து, தான்கண்ட கனவைத் தன்தாயினிடத்தில் சொன்னான். அதுகேட்ட அவள், "அப்பா! குழந்தாய்! துணையில்லாமல் இத்தனைதூரம் ஒன்றியாக எப்படிபோவாய் "என்று வருத்தப்பட்டு, பின்பு மகனைப்பார்த்து" என்கண்ணே! நீங்கள் அண்ணனும் தம்பியுமாக இரண்டுபேர்: என்கையில் நூறு ரூபா இருக்கிறது. ஆகையால், உனக்குச்சேரவேண்டிய பங்குபேர்பாதி யல்லவா; இந்த ஐம்பது ரூபாவை எடுத்துக்கொண்டுபோ, வேறு என்னகொடுக்கப் போகிறேன். ஒரே ஒருபுத்திசொல்லுகிறேன். அது மாத்திரம் நினைவில் இருக்கட்டும். 'நெஞ்சாரப் பொய்தன்னைச்சொல்லவேண்டாம்' என்றுசொல்லி பயணங்கூட்டினாள்.

அவனும் புறப்பட்டு பலகாததூரம் போய்க்கொண்டிருக்கையில், வழியில் சிலதிருடர்கள் எதிர்ப்பட்டார்கள்: அவர்களில் ஒருவன் "அடே! பையா! உன்னிடத்தில் என்ன இருக்கிறது" என்று கேட்டான்.

இந்தச்சிறுவன் ஐயா! என்மடியில் ஐம்பது ரூபா முடிந்து வைத்திருக்கிறேன்" என்று சொன்னான். அதைக்கேட்டதும் அந்தத்திருடன் சிரித்துக்கொண்டே "இந்தப்பையன் ஏளனஞ்செய்கிறான்" என்று நினைத்தான்.

இன்னொருதிருடனும் அப்படியே அந்த வாலிபனை "உன்னிடத்தில் என்ன இருக்கிறது?" என்று கேட்டான். அதற்கும் அந்த வாலிபன் முன்போலவே சொன்னான்.

பின்பு அந்த திருடர்களெல்லாம் தாங்கள் கொள்ளையடித்துக்கொண்டு வந்ததைப் பங்குபோட்டுக் கொண்டார்கள். அப்போது அந்த திருடர்களில் பெரியதிருடனான எஜமான் இந்தப்பிள்ளையைப்பார்த்து "அடபையலே! உன் கையில் என்ன வைத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

அதற்கு அந்தச்சிறுவன் "என்னிடத்தில் ஐம்பது ரூபா இருக்கிறது என்று முன்னமே உங்களில் இரண்டுபேரிடத்தில் சொல்லியிருக்கிறேனே" என்று சொன்னான்.

அதன்மேல் அந்தபெரியதிருடன் இரண்டுமூன்று பேரைவிட்டு இந்த இளைஞனுடைய மடியை அவிழ்த்துப்பார்க்கச்சொன்னான். அவர்களும்அப்படியே பார்க்க அந்தப்பையன் சொன்னதுசொன்னபடியே ஐம்பதுரூபா இருந்தது.

அதைக்கண்ட பெரியதிருடன் அதிகசந்தோஷமடைந்து "அவ்வளவு பத்திரமாய் உன்மடியில் முடிந்துவைத்திருப்பதை மறைக்காமல்உள்ளது உள்ளபடியே சொன்னதேது?" என்று அந்தச்சிறுவனைக்கேட்டான்.

அதற்கு அந்த அப்துல் என்பவன் "ஐயா! மூத்தோர் சொன்னவார்த்தை அமிர்தமல்லவா? நான் புறப்பட்டு வரும்போது என்னுடைய தாயார் 'நெஞ்சாரப்பொய்தன்னைச் சொல்லவேண்டாம்' என்று புத்திசொன்னார்கள். நானும் அப்படியே ஆகட்டும் என்று வாக்குக்கொடுத்து வந்தேன். சொன்னவாக்கைத்தட்டலாமா" என்றான்.

அது கேட்டதும் பெரியதிருடன் "அப்பா! பிள்ளாய்! உன்னை மெச்சினேன். இவ்வளவு இளையவனாயிருந்தும் தாய்சொன்ன சொல்லைத்தவறாமல் நடக்கிறாயே. நான் பனைமரம்போலு இவ்வளவு நெடுக வளர்ந்து பெரியவனாகியும் நல்லபுத்தி யில்லாமல் பொய்பூர்ணசந்திரனாய் களவையேகைகண்ட தொழிலாகச்செய்துவந்தேனே. உன்னைப் பார்த்தானாலும் புத்திவராதா" என்றுசொல்லி அந்தச்சிறுவனைச்சேர்த்து தழுவிக்கொண்டான்.

இதைக்கண்டு மற்ற திருடர்களெல்லாம் அசையாமல் அப்படியே நின்றார்கள். பிறகு பெரியதிருடனைப்பார்த்து "ஐயா! இத்தனைநாளாக இந்த திருட்டு வியாபாரத்தில் எங்களுக்குத் தலைவராக இருந்தீர். இனிமேற்பட ஏதாகிலும் ஒரு நல்ல காரியஞ் செய்யத்தொடங்கலாம். நீங்களே தலைவராக இருந்து நடத்தவேண்டும்" என்று சொன்னார்கள். உடனே "ஆனால் நாம் கொள்ளையடித்த இந்த சொத்துக்களைக்கொண்டுபோய் அவரவர்களிடத்தில் முன்னே சேர்த்துவிட்டு மறுவேலை பார்க்கவேண்டும்" என்று எஜமானன் உத்தரவு செய்தான். அவர்களும் அந்தச்சிறுவனுக்கு வந்தனைவழிபாடு சொல்லியனுப்பிவிட்டு நல்லபடியே காலங்கழிக்கலானார்கள்.

## விசேஷக்குறிப்புகள்.

**புதுவருஷ கௌரதாப்பட்டங்கள்.** புது வருஷம் பிறந்ததோடு மாக்ஷிமைதங்கிய மஹாராணியவர்கள் அவருடைய பிரஜைகள் உத்தியோகஸ்தர்களில் தக்கவர்களுக்கு வழக்கம்போல் கௌரதாப்பட்டங்களளித்து கௌரவிக்கச் செய்தார்கள். அப்படி கௌரவிக்கப் பெற்றவர்களில் நமது இராஜதானியில் விசேஷமான பட்டம்பெற்றவர்கள் மைசூர் திவான் ஸ்ரீ கே. சேஷத்திரி அய்யர் அவர்களும், கவர்ன்மெண்டு சீப் செக்ரிடெரி மிஸ்டர் ஜெ. எப். ப்ரைஸ் அவர்களுமே. முதலவர்க்கு கே. ஸி. எஸ். ஐ. பட்டமும், இரண்டாவதவர்க்கு ஸி. எஸ். ஐ. பட்டமும் கிடைத்தது. சில்லரை கௌரதாப் பட்டங்கள் பெற்றவர்களில் இராஜமகேந்திரம் காலேஜ் தெலுங்குபாஷாபண்டிதர் கே. வீரேசலிங்கம் பந்துலுகாருவும் மதுரை திருஞானசம்பந்த பண்டார சந்நிதியவர்களும் ராய்பஹதூர் பட்டம் பெற்றிருக்கிறார்கள். கவர்ன்மெண்டார் கௌரதாப்பட்டமளிப்பதில் பொருத்த நிமித்தம் பார்க்கிறதில்லைப்போலிருக்கிறது. ரெவினியூ ஸர்வே அஸிஸ்டெண்ட் சூபரின்டெண்டெண்டு ஸ்ரீ ஜி. வெங்கட்டராமய்ய காருவுக்கும், வடஆற்காடு டிப்டி கலெக்டர் எஸ். சாமிநாதய்யரவர்களுக்கும் ராவ் ஸாஹேப் பட்டம் அளிக்கப்பட்டிருக்கிறது.

---

**ஜூரிவிசாரணையேற்பாடு.** இதுவிஷயமாய் பெங்காளத்திலுண்டான கலபையதிகரித்து இதுவிஷயம் இந்தியா மந்திரியவர்கள் தீர்மானத்திற்குப் போய்விட்டது. இப்பொழுது இந்தியா மந்திரியாகவிருக்க கிம்பர்லி பிரபு இந்தியா கவர்ன்மெண்டாரும் ஜூரிவிசாரணை யேற்பாட்டைக் குறைத்துச் செய்த உத்திரவை அங்கீகரிக்க கூடவில்லையென்று முன்னதாக தந்திமூலமாய்த் தெரிவித்திருக்கிறதாகவும் அதன்பேரில் பெங்கால் உதவிக் கவர்னர் ஸர் சார்ல்ஸ் எலியட்டும், உள்நாட்டு மந்திரி ஸர். பிலிப் ஹட்சின்ஸனும், இராஜப்பிரதிநிதி, லார்ட் லான்ஸ்டௌனும் தாங்கள் இதுவிஷயத்தில் தோல்வியடைந்ததை யுன்னி இராஜிநாமா கொடுத்துவிட்டுப் போக உத்தேசிக்கிறார்களென்றும் கல்கத்தாவில் பலமாக வதந்திகள் உலாவுகின்றன. இவ்வதந்திகளின் உண்மை இன்னும் சிலதினங்களில் நன்றாக வெளிப்படும்.

---

**சென்னை எலெக்ட்ரிக் டிராம்வே.** இந்நகரில் மின்சார சூக்ஷ்மத்தால் இழுக்கப்படும் டிராம்வே என்னும் சிற்றிருப்புப்பாதைகள் போடக் கூட்டுமுதல் சேர்க்க வந்திருந்த அக்கம்பெனியின் சேர்மான் மிஸ்டர் உவில்யம் டிக்பி ஸி. ஐ. இ. இந்த ௴ 21௳ சனிக்கிழமை பம்பாயில் கப்பலேறி சீமைக்குத்திரும்பிச் சென்றார். அக்கம்பெனிக்குவேண்டிய கூட்டுமுதல் தொகை பெரும்பாலும் கிடைத்துவிட்டது. ஷை கம்பெனியின் முக்கிய இஞ்சினீரும் தற்காலமானேஜருமான மிஸ்டர் பால்கனர் என்பவர் சென்னை வந்து டிராம்வே போட வேலைதுவக்க ஏற்பாடுகள் செய்து வருகிறார்.

---

**காங்ரெஸ்சபை ஆசாரச்சீர்திருத்த சபைக்கூட்டங்கள்.** இம்மகா சபையார்கள் சென்ற மாசக்கடைசியில் அலஹாபாத்தில் கூடியதில் வழக்கம்போல் பலதீர்மானங்கள் செய்து கலைந்தார்கள். அடுத்த காங்ரெஸ்சபை பஞ்சாப் மாகாணத்திலுள்ள அம்ரிட்ஸர் பட்டணத்தில் கூடும்படி தீர்மானித்திருக்கிறார்கள்.

---

**சட்டநிருபண சபைகள்சீர்திருத்தம்.** இந்தியாசட்ட நிருபணசபைகளைச் சீர்திருத்துவதற்காக பார்லிமெந்து சபையார் சென்ற வருஷம்செய்த இந்தியன் கௌன்ஸில்ஸ் ஆக்ட்டு, இந்த மாசமுதலிலிருந்து ஊர்ஜிதத்திற்கு வந்தது. ஆக்ட்டு ஊர்ஜிதத்திற்கு வந்துவிட்டாலும் அந்த ஆக்டப்படி மெம்பர்கள் நியமிப்பதற்காக இந்தியா கவர்ன்மெண்டாரும் இந்தியா மந்திரியவர்களும் கலந்து யோசித்துச் செய்யவேண்டிய விதிகள் இன்னும் வெளிவரவில்லை. இவ்விதிகள் வெளிவராமையால் இந்தமாசத்தில் கூடிய சட்டநிருபணசபைகளில் முக்கியமான ஆலோசனைக்கு வந்த சட்டநிர்மாண விஷயங்கள் அச்சபைகள் புதிய ஆக்ட்டுப்படி சீர்திருத்தி யேற்படுத்தப்படும் வரையில் தள்ளிவைத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. நமது இராஜதானியில் அப்படி தள்ளிவைத்துக்கொள்ளப்பட்ட முக்கியமான விஷயம் 'வில்லேஜ்ஸெஸ்பில்.' பெங்காள இராஜதானியில் தள்ளிவைத்துக் கொள்ளப்பட்டிருக்கும் விஷயம் 'முனிசிபல் சட்டசீர்திருத்தமசோதா.' பிப்ரவரிமாச முடிவுக்குள் சட்டநிருபணசபைகளைச்சீர்திருத்துவதற்காக புதிய விதிகள் வெளியிடப்பட்டு ஊர்ஜிதத்திற்கு வந்துவிடுமென்று நம்புகிறோம். வெளியாகப்போகும் புதுவிதிகளின்படி சென்னை நகர் முனிசிபாலிடியார் ஒரு பிரதிநிதியும், யூனிர்வஸிடி சங்கத்தார் ஒரு பிரதிநிதியும் நியமிக்கச் சுதந்திரம்பெறுவார்களென்று நிச்சயமாய்த்தோன்றுகிறது. மற்ற விஷயங்கள் விதிகள் வெளிவந்த பிறகே தெரியவரும்.

---

**ஹைகோர்ட்டு.** சென்னை ஹைகோர்ட்ஜட்ஜிகளில் ஒருவராகிய மிஸ்டர் ஜஸ்டிஸ் ஷெப்பர்ட் அவர்கள் ரஜாவின்பேரில் சீமைக்குப் போயிருந்ததி லிருந்து திரும்பிவந்து நாளது ௴ 27௳ ஹைகோர்ட்டில் அவருக்குப்பதிலாக ஆக்டிங்வேலைப் பார்த்துவந்த மிஸ்டர் ஜஸ்டிஸ் பெஸ்ட் அவர்களிடமிருந்து அவர் வேலையை ஒப்புக்கொண்டார். மிஸ்டர் பெஸ்ட் ஒருவாரத்திற்கு ரஜாவெடுத்துக்கொண்டிருக்கிறார். பிப்ரவரி௴ 4௳ மிஸ்டர் ஜஸ்டிஸ் வில்கின்ஸன் பென்ஷன் வாங்கிக்கொண்டு அவர்வேலையைவிட்டு நீங்கி சீமைக்குப்போகிறார். அவர் போனவுடன் அவருடைய ஸ்தானத்தில் மிஸ்டர் பெஸ்ட் மறுபடியும் ஹைகோர்ட்டு ஜட்ஜாக வருவார்.